





திருவல்லிக்கேணி அருள்மிகு பார்த்தசாரதி ஆலயத்தில் கோடைக்கால வைணவ வகுப்புகளில் பங்கு பெற்றுப் பயன் பெற்றவர்களுக்கு ஆணையாளர் திருமிகு ச. மெய்கண்டதேவன் இ.ஆ.ப., அவர்கள் சான்றிதழ் வழங்கிச் சிறப்புரை ஆற்றினார்கள். அருள்மிகு பார்த்தசாரதி ஆலய செயல் அலுவலரும் உதவி ஆணையாளருமான திரு வாசுநாதன் பி.ஏ.பிஎல்., அவர்கள் விழா ஏற்பாடுகளைச் சிறப்புறச் செய்திருந்தார்கள்.



# திருக்கோயில்



திங்கள் இதழ்


| | | |
|---|---|---|
| தனி இதழ் | : | ரூ. 5.00 |
| ஆண்டு உறுப்பினர் கட்டணம் | : | ரூ. 60.00 |
| ஆயுள் உறுப்பினர் கட்டணம் | : | ரூ. 500.00 |

| மாலை | திருவள்ளுவர் ஆண்டு 2029 | வெகுதானிய ஆண்டு ஆனி | மணி |
|---|---|---|---|
| 40 | ஜூன் 1998 | | 6 |




முகப்பு

திருத்தணி
அருள்மிகு சுப்பிரமணியசுவாமி

## பொருளடக்கம்




திருக்கோயில்

இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை.

119, உத்தமர் காந்தி சாலை, சென்னை - 600 034.

தொலைபேசி : 8279407

# திருவல்லிக்கேணி அருள்மிகு பார்த்தசாரதி ஆலயத்தின் கோடைக்கால வைணவ வகுப்புகளின் தொடக்க விழாவில் ஆணையாளர் அவர்கள் ஆற்றிய சிறப்புரை

— திருமிகு ச. மெய்கண்டதேவன், இ.ஆ.ப.,
ஆணையாளர், இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை, சென்னை -34.

**''ஆழ்வார்கள் ஏற்றம்
அருளிச்செயல் ஏற்றம்''**

என்று போற்றிய மணவாள மாமுனிகள் அவற்றை ''வையம் அறியப் பகர்வோம்'' என்றார் உபதேச ரத்தினமாலையில்.

இன்றைக்கு அத்தகைய ஒரு தூய பணி - நம்முடைய சென்னையில் புகழ்பெற்று விளங்கும் அருள்மிகு பார்த்தசாரதி ஆலயத்திலே நடைபெறுகின்றது. இந்தக் கோடைக்கால வைணவ வகுப்புகள் தொடக்கவிழாவிற்கு தலைமை ஏற்பதிலே பெரு மகிழ்ச்சி அடைகின்றேன்.

**''குவலயத்தோர் தொழுது ஏத்தும் ஆதியைத்
திருவல்லிக்கேணி கண்டேனே''**

என்பது திருமங்கையாழ்வார் திருப்பாசுரம்.

''குவலயத்தோர் தொழுது ஏத்தும்'' என்ற அடைமொழியை பார்த்தசாரதி பெருமானுக்கும் கூறலாம். நம் குடும்பமெல்லாம் தழைக்கவேண்டும் என்பதற்காகத் தம் குடும்பத்தோடு வந்து வீற்றிருக்கும் ''திருவல்லிக்கேணி'' திருத்தலத்திற்கும் சாற்றி

**''குவலயத்தோர் தொழுது ஏத்தும்
திருவல்லிக்கேணி''**

என்றும் கூறலாம்.

அப்படிப்பட்ட பழமையும் பெருமையும் மிக்க திருவல்லிக்கேணியிலே இந்த வைணவ வகுப்புகள் தொடங்கப்படுவது பெருஞ்சிறப்பு. இன்றைக்கு இத்தகைய வகுப்புகளை ஒவ்வொரு மண்டலத்திலும் தொடங்கிஉள்ளோம்.

சைவசமய அறிவை ஊக்கப்படுத்தும் வகையில் சைவ திருக்கோயிலில் இதே போல கோடைக்கால வகுப்புகள் நடத்தப்படுகின்றன.

வைணவ சமய அறிவை மேம்படுத்தும் வகையில் ஒவ்வொரு மண்டலத்திலும் புகழ்பெற்ற மங்களாசாசனம் பெற்ற வைணவத் திருக்கோயிலில் கோடைக்கால வகுப்புகள் நடத்தப்படுகின்றன.

மக்களிடையே இந்த வகுப்புகளுக்கு நல்ல ஆதரவு இருப்பதாக அறிஞர் பெருமக்கள் கூறுகிறார்கள். மதுரையிலேயே இந்த வகுப்புகள் இந்த மாத ஆரம்பத்திலேயே தொடங்கிவிட்டன. அங்கு மாபெரும் மக்கள் ஆதரவு இந்த வகுப்புகளுக்குக் கிடைத்து இருப்பதாக எனக்குத் தகவல்கள வந்து கொண்டிருக்கின்றன.

**''தொட்டனைத்தூறும் மணற்கேணி
மாந்தருக்குக்
கற்றனைத்து ஊறும் அறிவு''**

என்பது திருக்குறள்.

தோண்ட தோண்ட மணலிலிருந்து நீர் ஊறுவதைப்போல, படிக்க படிக்க மனதினில் அறிவு ஊறும்.

படிப்பதற்கு இவ்வளவுதான் வயது என்று வரம்புகட்டமுடியாது.

''இரண்டாம் எட்டில் கல்லாதது கல்வி அல்ல'' என்று 16 வயதிற்குள் படித்துவிட வேண்டும் என்று ஒரு திரைப்படப்பாடல் கூறினாலும், திருக்குறள் என்ன கூறுகிறது என்று எண்ணிப் பார்த்தால் சாகும்வரையும் படித்துக்கொண்டே இருக்கலாம்.

**''யாதானும் நாடாமல் ஊராமல்
என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு?''**

என்று வாழ்நாளெல்லாம் வீணாள் ஆக்காமல் படி, படி,

படித்துக்கொண்டே இரு; கண்டதைப் படிக்காதே! கற்க வேண்டியதைப்படி என்று அறிவுறுத்துகின்றார் நம் வள்ளுவப் பெருமகனார்.

நம்மாழ்வார் சொல்கிறார்.

''கற்பார் இராமபிரானை அல்லால்
கற்பரோ?''

''கேட்பார் கேசவன் கீர்த்தி அல்லால்
கேட்பரோ''

ஆக எது மெய்யான கல்வி என்றால் சமயக் கல்விதான் மெய்யான கல்வி. சமயம் என்றாலே அதற்குப் பக்குவம் என்று பொருள்.

இந்த வையத்தில் வாழ்வாங்கு வாழப் பக்குவப்படுத்துவது சமயம். பண்போடு வாழப் பக்குவப்படுத்துவது சமயம்.

மதவெறி கொள்ளாமல் மனித நேயத்தோடு வாழ நெறிப்படுத்துவது சமயம்.

MBBS படிக்கலாம் - அது பொருளுக்காக.
BE படிக்கலாம் - அது பொருளுக்காக.
BL படிக்கலாம் - அது பொருளுக்காக.

உண்மையில் சமய நூல்களைப் படிப்பது தான் நமக்காகப் பயன்படும்; நம் வாழ்விற்காகப் பயன்படும். ஆகவேதான் வள்ளுவர் 2000 ஆண்டு களுக்கு முன்பே சொன்னார். இரண்டாம் குறளிலேயே வலியுறுத்திச் சொன்னார்.

''கற்றதனால் ஆய பயன் என்கொல்
வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்''

மற்ற படிப்பு வீண்; சமயப்படிப்பு தேன். சமயப்படிப்பினைப் படிக்காவிட்டால் மற்ற மற்ற படிப்பெல்லாம் பயனில்லை. அதனைத்தான் நம் மாழ்வார்

''கற்பார் இராம பிரானை அல்லால்
கற்பரோ''

என்று கூறுகின்றார்.

சமயக் கல்வியே மேலானது. இந்தக் கருத்து சைவ சமயத்திலும் வற்புறுத்தப்பட்டுள்ளது.

''படிக்கின்றிலை பழநித் திருநாமம்''

என்று அருணகிரிநாதர் கூறியுள்ளார்.

''கண்ணியது உன்புகழ்
கற்பது உன்நாமம்''

என்று அபிராமி பட்டர் கூறியுள்ளார்.

ஆகவே சமய அறிவு-சமயக்கல்வி மிகமிக அடிப்படையானது. அவசியமானது.

சமய அறிவு இல்லாத விஞ்ஞானம் குருடு.

Science without Religion is Blind.

புகழ்பெற்று விளங்கும் உலக விஞ்ஞானி ஐசக் நியூட்டன் கூறியுள்ள கருத்தாகும் இது. ஆகவேதான் போதிய சமயப் பயிற்சியை மக்களுக்கு வழங்குவது அவர்கள் வாழ்விலே ஒளி கூட்டுவதாக இருக்கும் என்ற முறையில் இந்தக் கோடைக்கால பயிற்சி வகுப்புகளைத் தொடங்கி யிருக்கிறோம்.

மக்களிடத்தில் இதற்கு நல்ல வரவேற்பு தெரிகின்றது. ''அறநிலையத்துறை உண்மையில் அறநிலையத்துறையாக இப்போது தான் செயல் படுகிறது'' என்று கூட பாராட்டுகளைப் பலர் தெரிவித்து வருகிறார்கள்.

மெய்யான சமய அறிவை நாம் மக்களுக்கு ஊட்டாததுதான் இன்று நாட்டிலே நடைபெறும் சமயப் பூசல்களுக்கெல்லாம் காரணம்.

''ஒன்றே குலம்
ஒருவனே தேவன்''

என்று 3000 ஆண்டுகளுக்கு முன்னால் திருமூலர் சொல்லிச் சென்ற கருத்தைத் தான் சென்ற நூற் றாண்டிலே இராமலிங்க சுவாமிகள்

''பெருநெறிபிடித்து ஒழுக வேண்டும்
மதமானபேய்பிடியாதிருக்க வேண்டும்''

என்று வற்புறுத்தினார்.

அதைத்தான் பட்டினத்தார்

''ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு''

என்று வலியுறுத்தினார்.

இந்த ஒப்பற்ற கருத்தைத்தான் நமது நம்மாழ்வார் பெருமானும்

''அவரவர் தம்தமது அறிவுஅறி வகைவகை
அவரவர் இறையவர் என அடி
அடைவர்கள்

*அவரவர் இறையவர் குறைவிலர்,*

*இறையவர்*

*அவரவர் விதிவழி அடைய நின்றனரே''*

என்று ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே மிகத்தெளிவாக எடுத்துக் கூறியிருக்கக் காண்கின்றோம். இப்படிப்பட்ட கருத்துகளில் நமக்குத் தெளிவு ஏற்பட்டுவிட்டால் எப்படி சமயப்பூசல் வரும்?

அப்படிப்பட்ட பக்குவத்தை உண்டாக்குவதுதான் சமயம். அதற்குத்தான் இந்த சமயப்பயிற்சி வகுப்புகள்.

*''மாயோன் மேய காடுறை உலகம்''*

என்று தொல்காப்பியத்திலேயே கூறப்பட்டிருப்பது கொண்டு வைணவ சமயத்தின் பழமையை உணருகின்றோம்.

*''நடந்தானை ஏத்தாத நா என்னா நாவே*

*நாராயணா என்னா நாவென்ன நாவே''.*

என்று சிலப்பதிகாரம்- நெஞ்சையள்ள நாராயணன் பெருமை பேசுவதையும் காண்கின்றோம்.

ஆழ்வார்கள், ஆழ்வார்கள் வழிவந்த தாழ்வேதும் இல்லாத ஆசாரியர்கள், நமது சமயமும், தமிழும் தழைக்க ஆற்றியுள்ள அரும்பணிகளை நாம் எல்லோரும் தெரிந்து வைத்துக்கொள்ள வேண்டாமா? அவர்களை நன்றியோடு நினைந்து நாம் போற்ற வேண்டாமா? அதற்குத்தான் இந்த சமயப் பயிற்சி வகுப்புகள்.

ஆழ்வார்கள் வளர்த்த தமிழ் ஞானத்தமிழ்

ஆழ்வார்கள் வளர்த்த தமிழ் ஈரத்தமிழ்.

*''அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக*

*இன்புருகு சிந்தை இடுதிரியா - நன்புருகி*

*ஞானச்சுடர்விளக்கு ஏற்றினேன் நாரணற்கு*

*ஞானத் தமிழ்புரிந்த நான்''*

பூதத்தாழ்வார் பாடியுள்ள பாடல்.

ஞானச்சுடர் விளக்கு ஏற்றினால், ஞானத் தமிழால் போற்றினால் ஞாலத்திறைவனை- நாராயணனை நேரிலே நாம் காணலாம்.

ஞானத் தமிழைத் தேடி இறைவன் தானே வந்து அருள்வான் என்பதை நமக்கு முதலாழ்வார் வைபவம் உணர்த்துகின்றது.

திருமழிசையாழ்வாரின் வரலாறும் இறைவன் தமிழுக்குப் பின்னாலேயே சென்ற வரலாற்றைப்

*''பைந்தமிழ்ப் பின் சென்ற*

*பச்சை பசும்கொண்டல்''*

என்பதைக் காட்டுகின்றது.

ஆண்டாள் தாம் பாடிய திருப்பாவையை ''சங்கத்தமிழ் மாலை'' என்று பெருமைபட தாமே போற்றியுரைக்கின்றார்.

தமிழில் இறைவனுக்குப் பல்லாண்டு பாடிய ஆழ்வார் ''பெரியாழ்வார்'' என்று இறைவனால் போற்றப் பெருமை அடைந்த வரலாறும் காண்கிறோம்.

''ஆயிரம் இன்தமிழ்'' பாடி ''நம்மாழ்வார்'' என்று நாராயணனே போற்றும் பெருமை பெற்றார் நம்மாழ்வார். அவர் தமிழில் பாடியுள்ள நான்கு நூல்கள் நான்கு மறைகள்; தமிழ் மறைகள்.

*''செய்ய தமிழ் மாலைகள் தெளிய ஓதி*

*தெளியாத மறைநிலங்கள்*

*தெளிகின்றோமே''*

என்று ஆழ்வார்கள் அருளியுள்ள நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் போற்றப்படுகின்றது.

இத்தகைய ஆழ்வார்கள் ஏற்றத்தையும், அவர்களுடைய அருளிச் செயல் ஏற்றத்தையும் உண்டு மகிழ, உதவுவதுதான் இந்தக் கோடைபயிற்சி வகுப்புகள்.

''கோடையிலே இளைப்பாறிக்

கொள்ளும் வகை கிடைத்த குளிர் தரு''

இந்தப் பயிற்சி வகுப்புகள்.

''வருத்தும் புறஇருள் மாற்ற'' க்

கிடைத்த அருமருந்து இந்தப் பயிற்சி வகுப்புகள்.

மதுரையிலே பொற்றாமரைக் குளத்திலே சங்கப் பலகை ஒன்று இருந்ததாக நாம் அறிகிறோம். அந்தப் பலகையிலே ஒரு தமிழ்நூலைக் கொண்டு போய் வைத்தால் அது மிக நல்லநூலாக இருந்தால் தான் அது ஏற்றுக்கொள்ளும். இல்லாவிட்டால் தள்ளிவிடும்.

பல தமிழ்ப்புலவர்கள் தாங்கள் தாங்கள் எழுதிய நூல்தான் சிறந்தது என்று வாதிட, மதுர கவியாழ்வார் உண்மையில் சிறந்தநூல் என் கையில் உள்ள இந்த நூல்தான் என்று நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியைக் காட்டியுள்ளார்.

புலவர்கள் அவரவர் எழுதிய நூல்களைச் சங்கப் பலகையில் வைத்தார்கள். பாடல் அதிகம், கனம் அதிகம் இருந்தாலும் அந்த நூல்களைத் தூரத் தள்ளிவிட்டது சங்கப்பலகை.

மதுரகவிகள் திருவாய்மொழியிலிருந்து இரண்டு அடிகளே இருந்த ஒரு பாடலை - நம்மாழ்வார் அருளிய பாடலைச் சங்கப் பலகை மேல் வைக்க சங்கப்பலகை அந்நூலைப் போற்றிக் கொண்டாடியது என்று ஒரு வரலாறு உள்ளது.

**''கண்ணன் கழலிணை நண்ணும்**
**மனமுடையீர்**
**எண்ணும் திருநாமம்; திண்ணம் நாரணமே''**

இந்த இரு அடிகளை - ஓங்கி உலகு அளந்த திருவடிகளாகச் சங்கப் பலகை போற்றியது என்பது அன்றைய வரலாறு.

அந்தப் பண்டைய வரலாறு இன்று பார்த்த சாரதி ஆலயத்திலே புதுப்பிக்கப்படுகின்றது.

நாராயணன் திருநாமத்தை- அவன் தத்து வங்களை - இன்று முதல் ஏழு நாட்கள் இங்கே ஒவ் வொரு நாளும் தலைசிறந்த பேராசிரியப் பெருமக்கள் கற்பிக்க இருக்கிறார்கள்.

இவர்கள் கற்பிக்கின்ற பைந்தமிழ் ஆனந்தம், பேரானந்தம்..எல்லோரும் இந்தப் பயிற்சி வகுப்பு களைப் பயனுறப் பயன்படுத்திக் கொள்ள வேண்டு மென அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

வைணவமடம் ஒன்று. அங்கே கற்கும் வயதிலே உள்ள இளஞ்சிறார் நால்வர் கூடி, ஏடு ஒன்றினை வைத்துக்கொண்டு கூடிப்படித்துக் கொண் டிருந்தார்கள். வயதான பெரியவர் ஒருவர் - அந்த மடத்துச் சமையல்காரர், அந்தக் குழந்தைகளைப் பார்த்து என்ன படிக்கிறீர்கள் என்று ஆவலோடு விசாரித்துள்ளார்.

உடனே அக்குழந்தைகள் ''முசலகிசலயம்'' என்று கூறி ஏளனமாகச் சிரித்துள்ளார்கள். பெரிய வருக்கு அவமானமாகப் போய்விட்டது. தன்னை ஒத்த - படித்த ஒரு பெரியவரை அணுகி '' முசல கிசலயம்'' என்றால் என்ன?'' என்று விசாரித்தார்.

''உலக்கைக் கொழுந்து'' என்று பிள்ளைகள் தன்னைக் கேலி பேசியிருப்பதைக் கண்டு கொண்டார். அவர் மனம் வாடவில்லை. குழந்தைகளைத் தேடிச் சென்று ஏன் என்னை அப்படிப் பழித்தீர் என்று சண்டை இடவில்லை.

முதுமையிலும் படித்தார். முயன்று முயன்று படித்தார். கலைமகள் அருளால் கலைகள் யாவும் உணர்ந்து, பழித்த சிறுவர்கள் வியப்புற, பண்டிதர் பலரும் வியப்புற, **''முசலகிசலயம்''** என்ற பெயரிலேயே ஒரு வைணவ நூலை அவர் வையத்திற்கு வழங்கிச் சிறப்புற்றார் என்பது பலரும் அறிந் துள்ள ஒரு வரலாறு.

ஆகவே

**''உள்ளத்தில் உண்மை ஒளி உண்டாயின்**
**பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் மனிதரெல்லாம்**
**விழிபெற்று பதவிகொள்வார்''**

என்பது மகாகவி பாரதியார் வாக்கு.

**உங்கள் செவிக்கு உணவு உண்டு.**
**உங்கள் சிந்தைக்கு உணவு உண்டு.**
**கருத்தோடு பயில்வோருக்குப் பசிக்கும்**
**உணவு உண்டு.**

இந்த அருமையான வாய்ப்பை - அற நிலையத்துறை வழங்கியுள்ள இந்தப் பொன்னான வாய்ப்பை நன்குப் பயன்படுத்திப்பயன்பெறவேண்டி விடைபெறுகின்றேன். நன்றி. வணக்கம். வாழ்க!

★★★

# ஆணையாளர் சுற்றறிக்கை

## சுற்றறிக்கை 33 889 / கே.1. நாள் 6.5.98

பொருள் : திருக்கோயில் திருத்தேர்களைப் பாதுகாக்க தக்க நடவடிக்கை எடுக்க செயல் அலுவலர்களுக்கு அறிவுறுத்துவது பற்றியது.

தமிழகத்திலுள்ள திருக்கோயில்கள் பலவற்றிலும் திருத்தேர் விழா ஒவ்வொரு ஆண்டும் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது.

ஆணவம், கன்மம், மாயை எனும் மும்மலங்கள் நீங்கி ஆன்மாக்கள் இறைவனை அடையும் தத்துவ விளக்கமாகத் திருக்கோயில்களில் திருத்தேர்விழா சிறப்பாக நடைபெற்று வருவது நாம் அறிந்துள்ள ஒன்று.

கோயிலுக்குக் கோபுரம் எவ்வாறு பொலிவினைச் சேர்க்கின்றதோ அதைப்போல திருவிழாவிற்குப் பொலிவினைச் சேர்ப்பது திருத்தேர் விழாவே ஆகும்.

இத்தகைய திருத்தேர் விழாக்களை ஒவ்வொரு ஆண்டும் சிறப்புறத் தொடர்ந்து நடத்திடும் வகையிலும், உலகமக்கள் அனைவரையும் ஈர்த்து இழுக்கவல்ல இத்திருத்தேர் விழாவிற்கு மேலும் சிறப்பினைச் சேர்க்கும் வகையிலும் திருத்தேர் உள்ள திருக்கோயில்களில் தேர்களைப் பாதுகாக்க கீழ்க்காணும் வகையில் தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ள திருக்கோயில் செயல் அலுவலர்கள் மற்றும் நிர்வாகிகளுக்கு அறிவுறுத்தப்படுகிறது.

1. மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் அவர்கள் 5.5.98 அன்று சட்டமன்றத்தில் அறிவித்திருப்பதைப் போல திருக்கோயில் திருத்தேர்களைப் பாதுகாக்கத் தகரக் கொட்டகை சுற்றிலும் அமைக்கப்பட வேண்டும்.

2. திருத்தேர்விழா நடப்பதற்குக் குறைந்தது இரண்டு மாத காலத்திற்கு முன்னதாகவே தேரோட்டத்திற்கு உகந்த நிலையில் திருத்தேர்கள் உள்ளனவா என்பதைச் சரிபார்க்கவேண்டும்.

3. திருத்தேர் நன்கு வண்ணம் பூசப்பட்டு நேர்த்தியாக வைக்கப்பட வேண்டும். வண்ணப் பூச்சு ஆங்காங்கே உலர்ந்து காணப்படின் அது மெய்யன்பர்களுக்கு மகிழ்ச்சியைத் தராமல் வெறுப்பையே தரும் என்பது குறிப்பிடத் தக்கது.

4. திருத்தேரினுடைய உறுப்புகள் அனைத்தும் உறுதிப்பாட்டுடன் தேரோட்டத்திற்கு உகந்ததாக இருக்கும் வகையில் தேர்த் தச்சர்களைக் கொண்டு செப்பனிட்டுப் பழுது பார்க்கப் படுதல் வேண்டும்.

5. திருத்தேரிலுள்ள சிற்ப வேலைப்பாடுகள் அருமையான கலைக் கருவூலங்களாகும். இவற்றைத் திருடி விற்பதற்கு முயலும் திருடர்கள் தம் கைவரிசையைக் காட்டிடாத வண்ணம் திருத்தேர்களை அவ்வப்போது கண்காணித்துப் பாதுகாத்திடல் வேண்டும். திருத்தேரில் பூட்டப்படுகின்ற குதிரை வாகனங்கள் போன்றவை செப்பனிடப்பட்டு வண்ணம் பூசப்பட்டுக் கண்ணைக் கவரும் வகையில் வைத்திருக்கவேண்டும்.

6. அவ்வாறே திருத்தேரில் பொருத்தப்பட்டுள்ள மணிகளைக் கள்வர்கள் கவரா வண்ணம்-கண்காணித்துப் பாதுகாத்திடல் வேண்டும். மணிகளின் நாவுகள் பழுதுபட்டிருந்தால் அவற்றைச் சரிபார்த்துச் செப்பனிடுதல் வேண்டும்.

7. திருத்தேர்விழா, காணவரும் மெய்யன்பர்களுக்கு எவ்வித ஊறும்விளைவித்திடாத வகையில் திருத்தேர்கள் முற்றிலும் செப்பனிடப்பட்டுத் தேரோட்டத்திற்கு உகந்ததாக உள்ளது என்பதற்கான சான்றிதழை அதற்குரிய பொறியாளரிடம் பெற்ற பிறகுதான் திருத்தேர்விழா நடத்தப்படல் வேண்டும். இச்சான்றிதழைத் திருத்தேரோட்டத்திற்குக் குறித்த நாளுக்கு முன்னரே போதிய அவகாசம் உள்ள வகையில் பெற்றுக் கொள்ள வேண்டியது அவசியமாகும்.

இத்தகைய அறிவுரைகளைக் கடைப்பிடித்து திருக்கோயில் திருத்தேர்விழா சீரோடும் சிறப்போடும் நடைபெறத் தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ள திருக்கோயில் செயல் அலுவலர்களுக்கும் நிர்வாகிகளுக்கும் அறிவுறுத்த இணை ஆணையாளர்கள் மற்றும் உதவி ஆணையாளர்கள் கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

இச்சுற்றறிக்கை கிடைக்கப் பெற்றதற்கான ஒப்புதலை உடன் அனுப்பி வைக்கக் கேட்டுக் கொள்ளப்படுகிறது.

ச. மெய்கண்டதேவன்
ஆணையர்.

# ஆலய வழிபாடு

முனைவர் டி. செல்வராஜ்

கோயிலுக்குப் போய் இறைவனை வழிபட வேண்டும் என்ற நியதி இல்லை. தூய்மையான எந்த இடத்திலிருந்தும், தனிமையில், இறைவனைத் தியானிக்கலாம். அல்லது வீட்டுப் பூசையறையில் வழிபடலாம். ஆனாலும், மன ஒருமையுடனும், மன அமைதியுடனும் இறைவனை வழிபடத் தகுந்த மிகப்பொருத்தமான இடம் கோயிலே.

கோயிலில் வழிபடத்தக்க எல்லா வசதிகளும், சூழ்நிலைகளும் இருக்கின்றன. விதிமுறைப்படி குறித்த காலங்களில் பூசைகள் முதலியன நடைபெறுகின்றன. தனித்நிலை வழிபாடும், கூட்டுநிலை வழிபாடும் அங்கு உண்டு.

பசுவின் உடம்பெல்லாம் பால் நிறைந்திருந்தாலும், அதன் மடியின் வழியாகத்தான் பால் வழிந்து பெருகும். அதைப்போல,

நிலத்தின் கீழே எல்லா இடங்களிலும் நீர் பரவியிருந்தாலும், கிணற்றின் வழியாகத்தான் நீர் ஊறிப் பெருகும். அதைப்போல,

இறைவன் எங்கும் நிறைந்து, பரவியிருந்தாலும் அவனது பேரருள் வழியுமிடம் கோயில்; ஊறிப் பெருகுமிடம் கோயில். அந்தப் பேரருளைப் பெறுவதற்காக அனைவரும் கோயிலுக்குப் போகவேண்டும். பக்தர்களின் உள்ளத்தில் பெருக்கெடுத்தோடுகின்ற பக்தி வெள்ளம், இறைவனது பேரருள் கடலில் சங்கமம் ஆவதே உண்மையான ஆலய வழிபாடு.

**உள்ளம் - பெருங்கோயில்**

மிகத்தூய்மையான, மிகப்பக்குவப்பட்ட உள்ளம் ஒரு திருக்கோயிலாகும். ''உள்ளம் பெருங் கோயில்'' என்பது திருமூலர் வாக்கு.

உள்ளப்பெருங்கோயிலுக்குள் மற்றொரு திருக்கோயிலைக் கட்டி, அதில் இறைவனைப் பிரதிட்டை செய்தார் பூசலார் நாயனார்.

உள்ளம் ஓர் அகக்கோயில். ''உள்ளங்கவர் கள்வனை''ச் சிக்கெனப் பிடித்து, பக்திப் பாசத்தால் பிணைத்து, அந்த உள்ளப் பெருங்கோயிலில் சிறைப் படுத்த வேண்டும்.

அகக்கோயிலில் அவனை உணர்ந்தால், புறக் கோயிலில் அவனைத் தரிசிக்க முடியும்.

**ஊனுடம்பு ஆலயம்**

''ஊனுடம்பு ஆலயம்'' என்றார் திருமூலர். ஆ + லயம் = ஆன்மாக்கள் அனைத்தும் இறைவனுடன் ஒன்றி, லயித்திருக்கும் புனிதமான இடம் ஆலயம். மனித உடம்பு ஓர் ஆலயம். உடம்பின் அமைப்பை ஒட்டியே ஆலயம் உருவாக்கப் பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| 1. | பாதம் | - கோபுரம் |
| 2. | முழங்கால் | - ஆஸ்தான மண்டபம் |
| 3. | தொடை | - நிருத்த மண்டபம் |
| 4. | வயிறு | - மணி மண்டபம் |
| 5. | தொப்புள் | - பலிபீடம் |
| 6. | முதுகுத்தண்டு | - கொடிமரம் |
| 7. | மார்பு | - மகாமண்டபம் |
| 8. | உட்பிரகாரம் | - தோள்கள் |
| 9. | வெளிப்பிரகாரம் | - கைகள் |
| 10. | கழுத்து | - அந்தரான மண்டபம் |
| 11. | முகம் | - அர்த்த மண்டபம் |
| 12. | செவிகள் | - பலகணிகள் |
| 13. | வாய் | - கருவறையின் வாசல் |
| 14. | தலை | - கருவறை |
| 15. | தலையுச்சி | - விமானம் |
| 16. | புருவநடு | - மகாலிங்கம் |

உடம்பின் உறுப்புகளுடன் இணைத்து ஆலயத்தின் அமைப்பினை வேறு வகையாகவும் விளக்கலாம்.

| | | |
|---|---|---|
| 1. | வாய் | - கோபுர வாசல் |
| 2. | நாக்கு | - நந்தி |
| 3. | உள்நாக்கு | - கொடிமரம் |
| 4. | ஐம்பொறிகள் | - விளக்குகள் |
| 5. | உள்ளம் | - கருவறை |
| 6. | உயிர் | - மகாலிங்கம் |

உயிருக்குயிராய் விளங்கும் இறைவனை உணர்ந்து வழிபடுவது அகவழிபாடு. இதற்குக் கடுமையான முயற்சியும், பயிற்சியும் தேவை.

வழிபாட்டு முறைகளில் மிகவும் எளியது, எல்லார்க்கும் ஏற்றது விக்கிரக வழிபாடு; ஆலய வழிபாடு.

### ஐந்து வகைச் சிவலிங்கங்கள்

லிங்கம் = லிம் - ஒடுங்குதல் ; கம் - தோன்றுதல். உலக உயிர்கள் அனைத்தும் ஒடுங்கி மீண்டும் தோன்றுவதற்குரிய மூல இடம் லிங்கம்.

1. விமானம் - தூல லிங்கம்
2. கருவறை - சூட்சம லிங்கம்
3. பலிபீடம் - அதிசூட்சும லிங்கம்
4. கொடிமரம் - காரண லிங்கம்
5. மூலலிங்கம் - மகாகாரண லிங்கம்

(தூலம் - கண்ணுக்குப் புலனாவது. சூட்சமம் - நுட்பமானது; கண்ணுக்குப் புலனாகாதது.)

### கோயில்களின் அமைப்பு முறை

***1. பலிபீடம் :*** கோபுர வாசலின் அருகில் தாமரை மொட்டுப்போல இருப்பது பலிபீடம்.

***2. கொடிமரம் :*** மூலவர் இருக்கும் திசையைக் காட்டுவது கொடிமரம். இறைவனையே தரிசிக்க வேண்டும் என்ற குறிக்கோளை இது உணர்த்துகின்றது.

***3. நந்தி:*** சிவபெருமானின் வாகனம். ஆன்மா, உயிர். உயிர்(நந்தி) இறைவனையே தரிசித்துக் கொண்டே இருக்கவேண்டும்.

***4. விளக்கம்:*** மூலவர், நந்தி, பலிபீடம் என்பன வற்றைச் சாத்திரங்கள் பதி, பசு, பாசம் என்று கூறுகின்றன.

எல்லாப்பந்த பாசங்களையும் பக்தர்கள் பலிகொடுத்துவிடவேண்டும். (பலிபீடம்), இறைவனை (பதி) அடையவேண்டும் என்ற குறிக்கோளுடைய (கொடிமரம்) பக்குவப்பட்ட உயிர் (நந்தி) இடையறாமல் இறைவனைத் தரிசித்து அவனுடன் இணைகின்றது என்ற அடிப்படைத் தத்துவத்தை இவை விளக்குகின்றன. இத்தத்துவம் எல்லாக் கோயில்களுக்கும் பொருந்தும்.

***5. கருவறை:*** மூலவர் பிரதிட்டை செய்யப்பட்டுள்ள சிறியஅறை. புனிதமானது. இதனைக் கர்ப்பக்கிரகம் மூலஸ்தானம், சன்னிதானம் என்றெல்லாம் கூறுவர். கோயிலின் மையப்பகுதி இது.

***6. அர்த்த மண்டபம்:*** கருவறையுடன் ஒட்டிய மண்டபம். அர்ச்சகர் நின்று மூலவருக்கு அர்ச்சனை முதலியன செய்யுமிடம்.

***7. மகாமண்டபம் :*** பக்தர்கள் வரிசையாக நின்று மூலவரைத் தரிசிக்கும் இடம்.

மேற்கண்ட அமைப்புகள் அனைத்தும் எல்லாக் கோயில்களிலும் இருக்கக் காணலாம். ஒற்றைக் கருவறைக் கோயில்களும் அதிகமாக இருக்கின்றன. இவற்றில் பலிபீடமும் வாகனமும் இருக்கும்.

பழங்காலத்து மிகப்பெரிய கோவில்களில் நிருத்த மண்டபம், அலங்கார மண்டபம், ஆயிரங்கால் மண்டபம் முதலிய பற்பல மண்டபங்கள் இருக்கின்றன. எனவே அவை பிரம்மாண்டமான அமைப்புடன் தோன்றுகின்றன.

***8. கோட்டத் தெய்வங்கள் :***

கருவறை வாசலின் வலப்பக்கம் விநாயகரும் இடப்பக்கம் முருகரும் உள்ளனர்.

சிவன்கோயில்களில் கருவறைப் புறச்சுவர்களின் மாடங்களில் (கோட்டங்களில்) தெய்வ மூர்த்தங்களை வடிப்பது வழக்கம்.

1. தெற்கு மாடம் தட்சிணாமூர்த்தி
2. மேற்கு மாடம் லிங்கோற்பவர் அல்லது விஷ்ணு
3. வடக்கு மாடம் துர்க்கை

பிரமன், நர்த்தன விநாயகர், பிட்சாடனர், அர்த்தநாரீசுவரர் முதலியோரையும் சில கோயில்களில் கோட்டத் தெய்வங்களாகத் தரிசிக்கலாம்.

***9. தனிச்சன்னிதிகள்:*** அம்பாள், விநாயகர், முருகர், விஷ்ணு முதலிய தெய்வங்களுக்குத் தனித்தனி சன்னிதிகள் இருக்கின்றன.

***10. சண்டேசுவரர்:*** துர்க்கைக்கு எதிரில் தனிச் சன்னிதியில் வீற்றிருக்கின்றவர் சண்டேசுவரர்.

**11. நவக்கிரகம்:** பெரும்பாலும் கோயிலின் வட மேற்கு மூலையில் அமைவது நவக்கிரக சன்னிதி.

**11. பிரகாரங்கள்:** ஒன்று அல்லது மூன்று அல்லது ஐந்து அல்லது ஏழு திருச்சுற்றுகள், பிரகாரங்கள் எனப்படும். இவற்றில் பற்பல மூர்த்தங்களும் சிறு சிறு சன்னிதி களும் இருக்கின்றன. பக்தர்கள் வலம் வரும்போது இவற்றை வழிபடவேண்டும்.

மேலும், தலமரங்கள் தீர்த்தக் கிணறுகள் முதலியன அனைத்தும் கோயிலின் அங்கங்கள் ஆகும்.

**வணக்க முறைகள்**

**1. திரியங்கம்:** தலைக்குமேல் இரு கைகளைக் குவித்து வணங்குவது. இது எல்லார்க்கும் உரியது.

தெய்வம், துறவிகள், முனிவர்கள் முதலியவர் களை வணங்கும்போது தலைக்குமேலும், பெற்றோர், ஆசிரியர் ஆகியவர்களை வணங்கும்போது முக்த்துக்கு நேரும், உறவினர்கள், நண்பர்கள் விருந்தினர்கள் முதலியவர்களை வணங்கும்போது கழுத்துக்கு நேரும் கைகளைக் குவித்து வணங்குவது முறை என்பர்.

**2. பஞ்சாங்கம்:** தலை, கை இரண்டு, முழந்தாள் இரண்டு ஆகிய ஐந்து அங்கங்களும் நிலத்திலே பொருந்தும்படி வணங்குவது பஞ்சாங்க வணக்கம். இது பெண் களுக்குரியது.

**3. அட்டாங்கம்:** தலை, கை இரண்டு, காது இரண்டு, தோள்கள் இரண்டு, மோவாய் ஆகிய எட்டு அங்கங் களும் நிலத்திலே பொருந்தும்படி வணங்குவது அட்டாங்க வணக்கம். இது ஆண்களுக்குரியது.

**4. சாஷ்டாங்கம்:** சக + அஷ்ட + அங்கம். தலை, காது இரண்டு, மார்பு, கை இரண்டு, கால்கள் இரண்டு ஆகிய எட்டு அங்கங்களும் நிலத்திலே பொருந்தும்படி வணங்குவது சாஷ்டாங்க வணக்கம். இதுவும் ஆண் களுக்குரியது.

சாஷ்டாங்க வணக்கத்தைத் தண்டமிடுதல் என்று தமிழில் கூறுகின்றனர். எந்த ஆதாரமும் இல்லாத தண்டம் (தடி) எப்படி நிலத்திலே விழுந்துவிடுமோ அப்படி நிலத்திலே விழுந்து வணங்குவது தண்டமிடுதில் ஆகும். ஆதரவற்ற அனைவருக்கும் இறைவனே அடைக்கலம். இது சரணாகதித் தத்துவம் ஆகும்.

*1.* பஞ்சாங்க, அட்டாங்க வணக்கங்களைக் குறைந்தது மூன்றுமுறை செய்ய வேண்டும். ஒருமுறை இருமுறை செய்வது குற்றம்.

*2.* நிலத்தில் படிந்து வணங்கும்போது மூர்த்தங்களை நோக்கிக் கால்களை நீட்டக்கூடாது.

*3.* கொடி மரத்திற்கு அருகில் விழுந்து வணங்கலாம்; வேறு எங்கும் விழுந்து வணங்கக் கூடாது.

*4.* தெய்வங்களைத் ''திரியாங்க'' முறையில் வணங்க வேண்டும். மற்ற நேரங்களில் கைகளை மார்பிலே அணைத்து வைத்துக்கொள்ள வேண்டும். கோயிலில் கைகளை தொங்கவிட்டு நடப்பதும் வீசிக்கொண்டு நடப்பதும் குற்றங்களாகும்.

*5.* கோயிலில் தெய்வத்தைத் தவிர வேறு யாருக்கும் வணக்கம் செலுத்தக்கூடாது.

**கோபுர வாசலைக் கடக்கும் முன்**

*1.* கோயிலில் நுழைவதற்குமுன் அந்தக் குறிப்பிட்ட கோயிலின் வழிபாட்டு முறைகளையும், வலம்வரும் மரபுகளையும், மற்ற வழக்கங்களையும் தெரிந்து கொள்ளவேண்டியது மிகமுக்கியம்.

*2.* ஒரு கோயிலுக்கு முதன் முறையாகப் போகும்போது, அதில் காணக்கூடிய அபூர்வமான காட்சிகளையும், அற்புதமான சிலைகளையும், அதிசயமான நிகழ்ச்சிகளையும் முதலிலேயே தெரிந்து அவற்றைத்தவறாமல் தரிசிக்க வேண்டும்.

*3.* நீராடி, துவைத்து உலர்த்திய ஆடையை உடுத்தி, விபூதியைத்தரிக்க வேண்டும், ஒரே ஆடையை - ஈரம் உலராத உடம்போடு ஒட்டிய ஆடையை - நவநாகரிக ஆடையை உடுத்தும், விதவிதமான நகைகளைச் சுமந்தும் கோயிலுக்குள் நுழைவது குற்றம்.

*4.* வழிபாட்டிற்காகப் பூ முதலான பொருள் களைத் தட்டில் அல்லது உலோகப் பூக்கூடையில் அடுக்கி, இரண்டு கைகளில் ஏந்திச் செல்ல வேண்டும். பூசைக்குரிய எந்தப் பொருளையும் இடுப்புக்குக் கீழே தொங்கவிடக்கூடாது. பூசைக்குரிய பொருள் எதுவும் இல்லாமல் கோயிலுக்குச் செல்லக்கூடாது.

கோபுரத்துக்கருகில் வந்ததும் மீண்டும் கை, கால்களைத்தூய்மைப் படுத்திக்கொள்ளவேண்டும்.

**கோபுர தரிசனம்**

''ஆலயந்தானும் அரனெனத் தொழுமே''
''ஆலயம் தொழுவது சாலவும் நன்று''

''கோபுர தரிசனம் கோடி புண்ணியம்''

''கோபுர தரிசனம் பாபவிமோசனம்''

கோபுர தரிசனத்தால் உண்டாகும் பலன்கள் பலவாம். காலையில் கோபுர தரிசனம் செய்வது நல்லது. கோயிலுக்கு வர முடியாதவர்கள், கோபுரத்தைத் தரிசித்து வணங்கினாலும், அது இருக்கும் திசை நோக்கித் தொழுதாலும் போதும். கோபுரம் கண்களுக்குத் தோன்றும்போதெல்லாம் அதை வணங்க வேண்டும்.

இறைவனிடம் எல்லா உயிர்களும் அடக்கம். கோபுரம் ஒரு லிங்கம்; கோபுரத்தில் பல சிலைகள் இருக்கின்றன; அவை லிங்கத்தில் அடக்கம். அந்தச் சிலைகள் வழிபாட்டுக்குரியன. ஆகவே, கோபுரத்தை அனைவரும் வணங்குகின்றார்கள். கோபுரம் = லிங்கம், சிலைகள் = லிங்கத்தில் அடங்கிய உயிரினங்கள்.

கோபுர வாசலைக் கடந்து பலிபீடத்திற்கு அருகில் வந்தவுடன், தெய்வச்சிந்தனையைத்தவிர, பக்தி உணர்வுகளைத்தவிர மற்ற எல்லாச் சிந்தனைகளையும், உணர்வுகளையும், உணர்ச்சிகளையும் அங்கே பலிகொடுத்துவிட வேண்டும். மனம் தூய்மையாக இருக்கவேண்டும்.

பலிபீடத்தையும், கொடிமரத்தையும் வணங்கி, நந்தி தேவரிடமும், துவார பாலகரிடமும் அனுமதி பெற்று, சிவதரிசன வழிபாட்டைத் தொடங்கித் தொடரவேண்டும்.

## விநாயகர் வழிபாடு

எப்போதும் முதல் வழிபாட்டுக்குரியவர் விநாயகர். இவரை வழிபட முதலில் ஐந்து முறை நெற்றிப்பொட்டில் குட்டிக் கொள்ள வேண்டும். இதனால் சில முக்கிய நரம்புகள் மென்மையாகத் தாக்கப்பட்டுப் புத்துணர்வு பிறக்கிறது. உள்ளம் பூரிப்படைகின்றது.

அடுத்து, ஐந்து முறை ''தோப்புகரணம்'' போடவேண்டும். ''தோர்பிகரணம்'' - தோப்புக்கரணம் என மாறியது. தோர்பி- கைகள். கர்ணம் - காது. அதாவது வலக்கையால் இடக்காதையும், இடக்கையால் வலக்காதையும் பற்றிக் கொண்டு உட்கார்ந்து, உடனே எழுந்திருப்பது தோப்புக்கரணம். இதைத் 'தொப்பணம்' என்றும் கூறலாம். இது ஒரு வகை உடற்பயிற்சி; உடலுக்கு நன்மை தருகின்றது.

விநாயகரையும், அடுத்து முருகரையும் வணங்கி, மூலவரை வழிபடக் கருவறையில் பணிவுடன் நுழையவேண்டும்.

## மூலவர் வழிபாடு

மூலவரை மனம் நெகிழ்ந்து வழிபட வேண்டும். தியானிக்கவேண்டும். அப்போது பக்திப் பாடல்களைப் பாடலாம்; ஒன்றை விண்ணப்பிக்கலாம்; வேண்டலாம்; முறையிடலாம்; பிரார்த்தனை செய்யலாம். பிரார்த்தனை செய்து வேண்டிய பக்தனை இறைவனை வெறுங்கையுடன் அனுப்பியதே இல்லை.

அர்ச்சகர் மூலவருக்கு அர்ச்சனை, அபிடேகம் செய்யும்போது வணங்கி, கற்பூரதீப ஆராதனையின்போது வழிபட்டு, அவரது திருவடித் தாமரையுடன் நம் இதயத்தாமரையைப் பக்தி நாரினால் கட்டிப் பிணைக்க வேண்டும்.

விபூதி முதலிய பிரசாதங்களை பயபக்தியுடன் ஏற்று, அணிந்து, மூலவரை வணங்கி, கருவறையை விட்டு வெளியே வரவேண்டும்.

## வலம் வருதல் (பிரதட்சணம்)

அடிமேல் அடிவைத்து மெதுவாக, நிதானமாக, கவனமாகச் சன்னதிகளை வலம் வருவது முறையாகும். வாகனத்திற்கும், மூலவர்க்கும் நடுவில் நுழைந்து வலம் வருவது குற்றம். வலம் வரத்தக்க எண்ணிக்கைகள் வருமாறு.

பொதுவாக மூன்று முறை வலம் வரலாம்.

1. விநாயகர் - 1 அல்லது 3 முறை
2. சூரியன் - 2.
3. சிவபெருமான் - 3, 5, 7 ஒற்றைப்படைகள்
4. முருகன் - 3
5. தட்சிணாமூர்த்தி - 3
6. சோமாஸ்கந்தர் - 3
7. அம்பாள் - 4, 6, 8... இரட்டைப்படைகள்
8. விஷ்ணு - 4
9. இலக்குமி - 4
10. அரசமரம் - 7
11. அனுமன் - 11 அல்லது 16
12. பிரார்த்தனைப் பிரதட்சணம் - 108
13. நவக்கிரகம் 3 அல்லது 9 முறை வலம் வரலாம்.

அல்லது சூரியன் முதலியவருக்கு ஏழுமுறை பிர தட்சணமாகவும், ராகு கேதுவுக்காக இரு முறை அப்பிரதட்சணமாகவும் (இடம் வருதல்) சுற்றிவந்து வழிபடுவது மற்றொரு முறை.

### தனிச்சன்னிதிகள்

ஆலயத்தில் அமைந்த அம்பாள், விநாயகர், முருகர் முதலியவர்களின் தனிச்சன்னிதிகளை வலம் வந்து வழிபடவேண்டும்.

நந்திக்குப்பதிலாக, அம்பாள் சன்னிதியில் சிங்கமும், விநாயகர் சன்னிதியில் மூஞ்சூறும், முருகர் சன்னிதியில் மயிலும் பிரதிட்டை செய்யப்பட்டிருக்கக் காணலாம்.

பிரகாரங்களில் விளங்குகின்ற தட்சிணா மூர்த்தி, நால்வர், அறுபத்துமூவர், லிங்கோற்பவர், துர்க்கை, பைரவர், விஷ்ணு, பிட்சாடனர் முதலான தெய்வ மூர்த்திகளையும், அகத்தியர் முதலான முனிவர்களையும் வணங்கவேண்டும்.

மூல மூர்த்திகளைத் தரிசித்த பின், உற்சவ மூர்த்திகளைத் தரிசிப்பது முறை.

### சண்டேசுவரர் வழிபாடு

கருவறையின் மேற்கில், துர்க்கைக்கு எதிரில், அபிடேக நீர் வழியும் கோமுகிக்கு அருகில், இருப்பது சண்டேசுவரர் சன்னிதி.

சிவனுக்குச் சார்த்தி நீக்கப்பட்ட பூக்கள், மாலைகள், ஆடை, அணிவகைகள் முதலியன நின்மாலியங்கள் எனப்படும். சிவனால் ஏற்கப்பட்ட நின்மலமான - மிகத்தூய்மையான பொருள்கள் இவை. இவற்றைச் சண்டேசுவரர் முன்னிலையில் சேர்த்து, ''சிவ தரிசனப் பலன்களை அளித்தருளவேண்டும்'' என்று அவரிடம் விண்ணப்பிக்க வேண்டும்.

சிவ நின்மாலியங்களைச் சண்டேசுவரரிடம் சேர்க்கவேண்டும் என்பதைச் சிலர் அறியாமல், தமது ஆடைகளின் நூலிழைகளைப் பிரித்துப்போடுவது குற்றம்; மென்மையாகக் 'கைகொட்டி' வணங்கிப் பிரார்த்தனை செய்ய வேண்டும்.

சண்டேசுவரர் முன் நின்று வழிபட்ட பிறகு, வந்த வழியே திரும்பிவிடவேண்டும். சன்னிதியை வலம் வரக்கூடாது.

சிவதரிசனம் சண்டேசுவரர் வழிபாட்டுடன் முற்றுப் பெறுகிறது. இவரைத் தரிசிக்கத் தவறியவர் களுக்குச் சிவ தரிசனப் பலன்கள் முழுமையாகக் கிடைப்பதில்லை. ''பிள்ளையார் குட்டுடன்'' தொடங்கிச் சண்டேசுவரர் ''கொட்டுடன்'' முடிவது முழு வழிபாடு'' என்பது ஆன்றோர் வாக்கு.

### ஓங்காரப் பிரதட்சணம்

அடுத்து, நவக்கிரகங்களை வலம் வந்து, மீண்டும் மூலவரைத் தரிசித்து வணங்கி, துவார பாலகர், நந்தி தேவரிடம் விடை பெற்றுக் கொடி மரத்துக்கருகில் மீண்டும் நிலத்தில் பொருந்தி வணங்க வேண்டும்.

ஒருவர் கோயிலுக்குள் நுழைந்தவுடன் அவரைச் சிவகணங்கள் தொடர்கின்றனர். எனவே, கோயிலுக்குள் சிறிது நேரம் வடக்கு நோக்கி அமர்ந்து, திருநாமங்களை உச்சரித்து, சிவகணங்களிடம் விடை பெற்றுக்கோபுர வாசலைக் கடந்து பூரண மன அமைதியுடன் வெளியில் வரவேண்டும்.

மேற்குறித்த முறைப்படி ஆலய வழிபாடு செய்தால், உங்களை அறியாமலேயே நீங்கள் ஆல யத்தை ''ஓம்'' என்ற வடிவத்தில் வலம் வந்திருப்பதை உணரமுடியும்.

ஓங்காரப் பிரதட்சணத்தில் ''ஓ'' என்ற எழுத் தின் மேற்சுழி முடியுமிடம் சண்டேசுவரர் சன்னிதி. இச்சன்னதியை முழுமையாக வலம்வந்தால் ''ஓ'' என்ற எழுத்தின் அமைப்பே சிதைந்துவிடும். ஆகவே, சண்டேசுவரர் சன்னிதியை, முழுமையாக ஒருமுறை கூட வலம் வரக்கூடாது என்று விதிக்கப்பட்டுள்ளது.

கோயிலுக்குப்போய் வந்தவுடன் ஏற்படும் மனஅமைதி, மனத்தெளிவு முதலிய நல்ல பலன்களை அவரவர் உணரமுடியும்; சொல்லமுடியாது; சொல்லி முடியாது. கோயிலுக்குப்போய் வந்தவர் யாராக இருந்தாலும் அவரது முகத்தில் ஒரு புதுப்பொலிவும், அவரிடம் ஒரு புத்துணர்ச்சியும் இருப்பதை நேரில் காணலாம். ஆகவே, அனைத்து வகையான வழிபாடுகளில் ஆலய வழிபாடே சிறந்தது.

### பெருமாள் கோயில் அமைப்பு

சிவன், பெருமாள் கோயில்களின் அமைப்பு களுக்கிடையில் அதிகமான வேறுபாடுகள் இல்லை.

பெருமாள் கோயில்களில் நந்தி தேவருக்குப் பதில் கருடாழ்வார் சன்னிதி இருக்கும்.

கோட்ட தெய்வங்களையும், நவக்கிரக சன்னதியையும் பெருமாள் கோயில்களில் பொதுவாகக் காணமுடியாது. பெருமாள் கோயில்களில் ஓரிரண்டில் இவற்றையும் காணலாம்.

சிவன் கோயில்களில் லிங்க வடிவத்திலும், பெருமாள் கோயில்களில் உருவச்சிலை வடிவத்திலும் மூலவர்கள் காட்சி அருளுகின்றனர்.

பெருமாள் கோயில்களில் பலிபீடம், கருவறை, உற்சவர் மண்டபம், அலங்கார மண்டபம், திருமஞ்சன மண்டபம் ஆகிய ஐந்தும் அமைந்திருக்க வேண்டும். ஆலயம் - தடாகம். கருவறையின் விமானம் - நீர். தாமரைக்கொடியின் மூலக்கிழங்கு - கருவறை. பலிபீடம், அலங்கார மண்டபம், திரு மஞ்சன மண்டபம் ஆகிய மூன்றும் தாமரை இலைகள், உற்சவ மண்டபம் - தாமரைப்பூ. பக்தர்களின் இதயத் தாமரையில் நின்றும், இருந்தும், கிடந்தும், நடந்தும், நடமாடியும் அருள்பாலிக்கின்றவர் மகாவிஷ்ணு.

பிரகாரங்களில் தாயார் சன்னிதியும், அவதாரச் சிலைகளும், ஆழ்வார் முதலியவர்களின் சிலை களும் உள்ளன.

## பெருமாள் கோயில் வழிபாடு

பக்தர்கள் நீராடி, தூய ஆடைபுனைந்து, திருமண் தரித்து, இறைவனது திருநாமங்களையோ, பக்திப்பாசுரங்களையோ உரைத்தபடி கோயிலில் நுழைந்து பலிபீடத்தையும், கொடிமரத்தையும் வணங்கவேண்டும். அடுத்து, கருடாழ்வார் அனுமதி பெற்று, கருவறையை அடைந்து, மூலவரைத் தரிசிக்கவேண்டும். துளசி, துளசிதீர்த்தம் முதலிய பிரசாதங்களை இரு கைகளால் பயபக்தியுடன் ஏற்றுக் கொள்ளவேண்டும். தொடர்ந்து அர்ச்சகர் சடாரியைச் சார்த்தலை தாழ்த்திப் பணிவுடன் சேவித்து வழிபட வேண்டும். வலம் வந்து வழிபடவேண்டும்.

அடுத்து, தாயார் சன்னிதிக்குச் சென்று, தாயாரைச் சேவித்து, குங்குமம் முதலான பிரசாதங் களைப் பெற்று வலம்வரவேண்டும்.

மேலும், பிரகாரங்களில் அமைந்த ராமர், கிருஷ்ணர், சரஸ்வதி, சக்கரத்தாழ்வார், ஆண்டாள், அனுமன், ஆழ்வார்கள் முதலானோர் சன்னிதிகளை யும், மூர்த்தங்களையும் வழிபட்டு, கொடி மரத்தடியில் மீண்டும் பணிந்து, சற்று நேரம் அமைதியாக அமர்ந்து, இறைவனைத்தியானித்து, திருநாமங்களை உச்சரித்து, கோபுரவாசலைக் கடந்து செல்லவேண்டும்.

*சடாரி:* பெருமாளின் திருவடிகள் பதிந்த சிறுகிரீடம் போன்றது இது. ஆதிசேடனின் அம்சம். 'சடாரி' என்பது நம்மாழ்வாரைக்குறிக்கும் ஒரு பெயர். நம்மாழ்வார் சடாரியாக விளங்குகின்றார் என்று நம்புகின்றனர். அர்ச்சகர் பக்தரின் தலையில் சடாரி யைச் சாதிக்கும்போது, இறைவனின் திருவடிகள் அருளுகின்ற பேறுகள் பக்தருக்கு முழுமையாகக் கிடைக்கின்றன.

## கோயிலில் செய்யத்தக்கன.

### (அ) மனம்

மனம், தெய்வச் சிந்தனை என்ற ஒரு தூணைப் பற்றிக்கொண்டு, அதையே விடாமல் சுற்றிச் சுழன்று கொண்டிருக்க வேண்டும். மனத்தூய்மையொன்றே ஆலய வழிபாட்டின் தொடக்கமும், இயக்கமும், முடிவும் ஆகும். ஆகவே, மனம் எதனாலும் சஞ்சலப் படக்கூடாது; சபலப்படக்கூடாது.

சில கோயில்களில் ஆபாசமான சிலைகளும் காட்சிகளும் இருக்கும். பக்தர்களின் மனத்திண்மையை அவர்களே உணர்ந்து கொள்ள, எளிதில் பார்வைபடும் இடங்களில் அவை அமைக்கப்பட்டிருப்பதைக் காண லாம்; ஆபாசச்சிலை ஒரு புறம்; ஆண்டவன் சிலை மறுபுறம்; இரண்டுக்கும் இடையில் மனம் ஊசலாடக் கூடாது. இவை இரண்டில் மனத்தில் பதியவேண்டிய சிலை எது? ஆண்டவன் சிலையே மனத்தில் பதிய வேண்டிய சிலை ஆகும்.

### (ஆ) மொழி

மிகத் தேவைப்பட்டால், கோயிலில் பேசத் தக்க சில சொற்களை மெதுவாகப்பேசலாம். ஆனால் வெட்டிப்பேச்சும், பொய் கூறுதல், நிந்தித்தல், கிண்டல் செய்தல், வீட்டைப்பற்றியும், நாட்டைப் பற்றியும் உரையாடல், உரக்கப்பேசுதல், கத்துதல் முதலியன நிகழக்கூடாது.

### (இ) செயல்கள்

1. ஆலய வழிபாட்டில், பழைய ஆசாரங்களும், மரபுகளும், பழக்க வழக்கங்களும் தவறக்கூடாது.

2. படிகள், சிலைகளின் காலடிகள் முதலிய இடங்களில் கற்பூரம் ஏற்றக்கூடாது.

3. கோயிலின் பிரதான வாசல்கள், படிகள் முதலியவற்றில் இலக்குமி குடியிருப்பதால் அவைகளின் மீது உட்காரக்கூடாது.

4. மூர்த்திகளை நோக்கிக் கால்களை நீட்டி உட்காரக் கூடாது.

5. படுக்கக்கூடாது; தூங்கக்கூடாது.

6. மூக்கைச் சிந்தக்கூடாது; எச்சில் துப்பக்கூடாது.

7. கோயிலின் தூய்மையை எந்த வகையிலும் கெடுக்கக்கூடாது.

8. முடிந்த வரையில், கொடிமரம், நந்தி, மூர்த்திகளின் நிழல்களை மிதிக்கக்கூடாது; தாண்டக் கூடாது.

9. மற்றவர் வழிபடும் போது இடையூறாக இருக்கக்கூடாது.

10. அபிடேகம், ஆராதனைக் காலங்களில் பிரகாரங்களில் வலம் வரக்கூடாது.

11. பக்தர்கள் கோயிலில் இயங்குவதற்குச் சில எல்லைகள் இருக்கின்றன. அந்த எல்லையைக் கடந்து சென்று வழிபடக்கூடாது.

12. காண்பவர்களின் கண்களையும், கருத்தையும் கவரும்படி நவ நாகரிக, கவர்ச்சியான ஆடை, அணிகலன்களை அணியக்கூடாது.

13. ஆடையை நெகிழ்த்துக் கட்டக்கூடாது; சரிய விடக்கூடாது.

14. மயிரைக் கோதிவிடக் கூடாது; கூந்தலை அவிழ்த்து முடிக்கக்கூடாது.

15. தூய்மையற்ற நாள்களில் கோயிலுக்குள் நுழையவே கூடாது.

16. இறைவனுக்குச் சார்த்தி நீக்கிய பூக்கள், மாலைகள் முதலிய நிர்மாலியல்களை மிதிக்கக்கூடாது.

17. கோயிலில் வழங்கப்படும் பிரசாதத்தைத் தவிர வேறு எதையும் உண்ணக்கூடாது.

18. கோயிலுக்குள் விளையாடவும், சிலைகளைத் தொடவும் குழந்தைகளை அனுமதிக்கக்கூடாது.

19. வீணே பொழுது போக்கக்கூடாது.

20. பிரசாதத்தைச் சிந்தக்கூடாது; அவமதிக்கக்கூடாது.

21. விளக்குகளுக்கு எண்ணெய் வார்த்து எரிக்கலாம்; அணைகின்ற விளக்கைத் தூண்டலாம்; எரிகின்ற விளக்கை, கற்பூரத்தை அணைக்கக்கூடாது.

இவ்வாறான வழிமுறைகளைக் கடைப்பிடித்து உயிருக்கு உறுதுணை ஆகும் இறைவனின் உயர் திருவடிகளைப் பற்றிப் பிறவிக் கடல் கடந்து அழியா முத்திப் பெறும் பேரின்பம் பெற்று அனைவரும் உயர்ந்திட அன்புடனே வேண்டுகின்றேன்.

''பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்.

- திருக்குறள்.

★★★

# கம்பனும் திருமுறைகளும்

— கம்பன் கவிநயமணி வே. தியாகராஜன்.

### திருஞான சம்பந்தப் பெருமான்

"திரு" என்ற சொல்லுக்கு நம் முன்னோர்கள் திருமகள், செல்வம் எனப் பொருள் கூறினர். திருநாவுக்கரசு சுவாமிகள் **"திருவே! என் செல்வமே"** எனச் சிவபெருமானை அழைத்துப் பாடியதால் திரு என்ற சொல்லுக்குச் சிவபெருமான் என்றும் பொருள் கொள்ளலாம் என ஒரு உரையாசிரியர் கூறிப் போந்தார். சிவபெருமானைப் புகழ்ந்து மூவர் முதலான பெரியோர்கள் பாடியருளிய பாடல்களை ஒழுங்குபடுத்தி, திருமுறைகள் எனப் பெயரிட்டு உலகிற்கு உதவியருளினார் நம்பியாண்டார் நம்பிகள். திருஞான சம்பந்தப் பெருமானின் திருப்பாடல்களை முதல் மூன்று திருமுறைகளாகவும், அப்பர் சுவாமிகளின் பாடல்களை நான்கு முதல் ஆறாம் திருமுறைகளாகவும், சுந்தரமூர்த்தி நாயனாரின் தேவாரத்தை ஏழாவதாகவும், மணிவாசகப் பெருமானின் திருவாசகம் திருக்கோவையார் இவற்றை எட்டாம் திருமுறையாகவும், திருமாளிகைத் தேவர் முதலான ஒன்பது பெரியோர்கள் பாடியருளிய பாடல்களை ஒன்பதாம் திருமுறையாகவும், திருமூலநாயனார் அருளிச் செய்த திருமந்திரத்தைப் பத்தாம் திருமுறையாகவும், திருவாலவாயுடையாரருளிச் செய்த **திருமுகப்பாசுரம்** உள்ளிட்டு பன்னிரண்டு பெரியோர்கள் பாடியருளிய பாசுரங்களைப் பதினோராம் திருமுறையாகவும், தில்லைநாயகனான நடராசப் பெருமான் **உலகெலாம்** என அடியெடுத்துக் கொடுத்துச் சேக்கிழார் பெருமான் அருளிச் செய்த திருத்தொண்டர் புராணத்தை பன்னிரண்டாவது திருமுறையாகவும் முறைப்படுத்தியருளினார் நம்பியாண்டார் நம்பி.

நம் செந்தமிழ் நாட்டின் கவிச்சக்கரவர்த்தியான கம்பர் பெருமானது பல பாடல்களின் கருத்துக்கள் திருமுறைகளின் கருத்துக்களை ஒத்துள்ளன. அவற்றைக் கம்பராமாயணக் காண்டங்களின் வரிசையாகப் பின்னர் எடுத்துக்காட்டும் கருத்துடைய இவ் வெளிய தமிழன் தேவாரத் திருமுறைகளின் வரிசைப்படி சில கருத்துகளை அன்பர்கட்கு அளித்து தமிழன்பர்களின் அன்பையும் ஆசியையும் பெறும் அவாவுடையேன்.

திருமுறைகள் வேதங்களை நிகர்த்தவை. இறைவனே வேதத்திற்குப் பொருள் அருளிச் செய்த தாகத் திருவிளையாடற்புராணம் கூறுகிறது. கம்பனது காவியத்தில் சுமார் 350 இடங்களில் சிவபெருமானைப் பற்றிக் கூறியுள்ளார். தமிழ்நாட்டையாண்ட அங்கயற் கண்ணி ஆலவாய்ப் பெருமானின் அருள்கொண்டு திருமுறையாசிரியர்களின் முதற்பாடல்களுடன் கம்பனது சொற்களின் கருத்துக்களின் ஒப்புவமை காட்டி, பின்னர் காண்டங்கள்தோறும் கம்பன் கூறும் சிவபெருமான் பற்றிய சிறப்பான கருத்துக்களைக் காண்போம்.

திருஞான சம்பந்தப் பெருமானின் முதல் திருமுறை **தோடுடைய செவியன்** என்ற சொல்லில் தொடங்கி, சேக்கிழாருக்குத் தில்லைநாயகனான நடராசப் பெருமான் எடுத்துக் கொடுத்த **உலகெலாம்** என்ற சொல்லுடன் (சேக்கிழார் பெருமான் இச் சொல்லைத் தமது திருத்தொண்டர் புராணத்தில் முதலிலும் நடுவிலும் கடைசிச் சொல்லாகவும் பயன்படுத்தியுள்ளார்) தொடங்கி அதே சொல்லுடன் பூர்த்தி செய்தருளினார். முதல் திருமுறையின் முதல் சொல்லும் பன்னிரண்டாம் திருமுறையின் கடைசிச் சொல்லும் சேர்ந்து **தோடுடைய செவியன் - உலகெலாம்** என்றாகி, அம்மையப்பரான சிவபெருமானே உலகம் பூராவும் நிறைந்தவர் என்ற உண்மையைக் காட்டுகிறது.

வேதத்தை எங்கு எப்போது தொடங்கினாலும் **ஓம்** என்ற பிரணவ எழுத்துடனே தொடங்குவது மரபு. ஓம் முதலில் உண்டாயிற்று. பின்னர் வேதம் பிறந்தது. **பிரணவம் உதித்தது அதனிடை வேதம் பிறந்தது** என்று திருவிளையாடற் புராணமுடையார் வாக்கு. **ஓம்** என்ற ஓரெழுத்து **அ-உ-ம்** என்ற மூன்றெழுத்துக்களின் சேர்க்கை என்றனர் பெரியோர். அதனாலே நம் பெரியோர்கள் உ என்ற எழுத்துடன் தமது நூல்களைத் தொடங்கினர். கம்பன் **உலகம் யாவையும்** என்றும், சேக்கிழார் பெருமான் **உலகெலாம்** என்றும், நக்கீரர் திருமுருகாற்றுப்படையை **உலகம்** என்ற சொல்லுடன் தொடங்கினர். அருணகிரிநாதப் பெருமான் மந்திர நூலாகிய கந்தரனுபூதியை **ஆடும்பரி** எனத் தொடங்கினார். மயில் தோகையை விரித்து

ஆடும்பொழுது ஓம் என்ற எழுத்தை நினைவுறுத்து கிறது. மேலும் **ஆ** வில் அகாரமும் **டு** வில் உகாரமும் **ம** ல் மகாரமும் தோன்றி ஓங்காரமாயிற்று.

ஞானசம்பந்தப் பெருமான் **தோ** என்ற எழுத் துடன் தொடங்கினார் என்றால், அவர் பாடுவது தமிழ் வேதமான **இறைவன் அணியும்** மாலையான தேவாரம். தமிழ் என்பதன் முதலெழுத்து **த**. அதன் ஒற்றெழுத்து **த்** என்பதை ஓங்காரத்துடன் சேர்க்க **தோ** என்றாயிற்று. அந்தணர்களின் முக்கிய மந்திரம் காயத்ரி. அதன் முதல் எழுத்து **த**. அந்தணகுலமணியான ஞான சம்பந்தப் பெருமான் காயத்ரியின் முதல் எழுத்தான **த** என்பதின் ஒற்றெழுத்தான **த்** என்பதை ஓங்காரத்தில் சேர்த்து **தோ** என் ஆரம்பித்தருளினார் எனக் கூறினார் ஒரு மகாத்மாவான பக்தர்.

தாம் கோபுரத்தைச் சுட்டிக்காட்டி அழுதருளிய போது காது கேட்டதால்தான் இறைவன் தோன்றி அருள் புரிந்தார். அதனால் **திருச்செவியைச் சிறப் பித்துப்** பாடத் தொடங்கியருளினார் ஞானசம்பந்தப் பெருமான். மேலும் உலகத்தவர்களின் காதுகளின் அமைப்பு ஓம் என்ற எழுத்தை நினைப்பூட்டுகின்றன அன்றோ! ஒரு காதில் தோடும் ஒரு காதில் குழையும் அணிந்த அம்மையப்பரின் உருவாக இறைவன் காட்சியளித்ததால் **தோடுடைய செவியன்** எனத் தொடங்கியருளினார். இறைவன் அம்மையப்பராகத் தோன்றும் தோற்றத்தைக் கவிச்சக்கரவர்த்தி **உமை யொருபாகத்தொருவன், வனிதையோர் பாகன் - ஏழைபங்கன், மழவிடையோன், பங்கிலுறையும் குயில், நாரிபாகன்** என்றெல்லாம் குறித்தார்.

வெள்ளைப்பாலை அருந்தி அதன் பெருமை யால் தமிழ்ப் பாடல் பாடத் தொடங்கிய சம்பந்தப் பெருமான் வெள்ளையாகவே இறைவனை வர்ணனை செய்து பாடியருளினார். வெள்ளைத் தோட்டை யணிந்த சிவபெருமான் வெண்மையான காளை மாட்டின் மீது ஏறிவந்தருளினார். தருமம் வெண்மை யானது. தருமதேவதையே காளையுருக் கொண்டு இறைவனைச் சுமந்தது என்பர். இதனை சம்பந்தப் பெருமான் **விடையேறி** எனக் குறித்தருளினார். சிவபெருமான் காளை வாகனமேறி வந்தருளுவதை கம்பர் பெருமான் **செங்கணேற்றவன், விடைச் சங்கரன், இடபமூர்தும் கடவுள், விடை மேலவன், ஏறமர் கடவுள், விடை வருபாகன், மூவரில் பெற்ற முடையவள், மழவிடைபாகன், வெள்விடையான்** என்றெல்லாம் குறித்தார்.

சந்திரன் தட்சனுடைய இருபத்தேழு பெண் களைத் திருமணம் செய்து கொண்டான். (அவர்கள் தான் இன்று இருபத்தியேழு நட்சத்திரங்களாக விளங்குபவை). அவர்களில் பேரழகியாக விளங்கிய ரோகிணி என்பவளிடம் அதிக அன்பு காட்டிய சந்திரன் மற்ற பெண்களை அலட்சியம் செய்தான். மற்ற பெண்கள் தங்கள் தந்தையான தட்சனிடம் முறையிட, தட்சன் எல்லாப் பெண்களிடமும் அன்பாக நடந்து கொள்ளுமாறு சந்திரனுக்கு நற்புத்தி கூற, சந்திரன் தட்சனை எதிர்த்துப் பேசிவிட்டான். சினம் கொண்ட தட்சன் பின் விளைவுகளைச் சிறிதும் கருதாது, சந்திரன் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கலையாக இழந்து பதினாறு நாட்களில் அழிந்து விடுமாறு சாபமிட்டு விட்டான். கோபம் புத்தியை அழிக்க, தன் மக்களுக்கு நேரக்கூடிய பெருங்கெடுதியைக் கூட தட்சன் எண்ணிப் பார்க்கவில்லை! பதினைந்து நாட்களில் ஒவ்வொரு கலையாக இழந்து, கீற்றுப் பிறையாக மாறிய சந்திரன் சிவபெருமானிடம் முறையிட, ''தட்சனின் சாபத்தை நாம் மாற்ற விரும்பவில்லை. கீற்றுப்பிறையாகிவிட்ட உன்னை எம் தலையில் அணிந்து கொள்கிறோம். பதினைந்து நாட்களுக்குத் தேயும் நீ, பதினைந்து நாட்களுக்கு வளர்ந்து வருவாய். சிவபெருமானை அடைபவர் வளர்ச்சியடைவர் என உலகம் அறி யட்டும்'' எனக் கூறிக் கீற்றுப் பிறையைத் தலையில் சூடியருளினார். சந்திரன் பதினைந்து நாட்கள் தேய்ந்து மறைந்து அமாவாசையாகவும் பதினைந்து நாட்கள் வளர்ந்து பௌர்ணமி சந்திரன் எனவும் விளங்கினான். முழுச்சந்திரனுக்குக் களங்கம் உண்டு. கீற்றுப் பிறைக்கு களங்கம் கிடையாது. இதை **''தூவெண் மதிசூடி''** எனக் குறித்தருளினார் சம்பந்தப் பெருமான். இருபத் தேழு பெண்களுக்கு மாங்கல்யத்தைக் காத்த கருணையிது.

இவ்வழகிய கோலத்தைக் கம்பன் **தவள மதிபுனை அரன், இளஞ்சந்திர மௌலி, முற்றா மதியம் மிலைந்தான், திங்கள் சூடிய செல்வன், இந்துமோலியான், சந்திரமௌலி, குழந்தை வெண் மதிக் குடுமியான், நிலவைச் செஞ்சடை வைத் தவன், கங்கையும் பிறையும் சூடும் கண்ணுதல், முளையமை திங்கள் சூடும் முக்கணான், துண்டங் கொள் பிறையான், திங்கள் மேவும் சடைத் தேவன், அவிர் மதியணிந்த தூயவன்** என்றெல்லாம் தம் இராமாயணத்தில் குறித்தார்.

அடுத்து **காடுடைய சுடலைப் பொடிபூசி** என்றார். சிலர் சிவபெருமானை சுடுகாட்டுக் கடவுள் என்பர். நல்லவன், பொல்லாதவன், ஏழை, பணக் காரன், தெய்வ நம்பிக்கையுள்ளவன், இல்லாதவன் யாவரும் இறைவனுடைய மக்கள். தன் குழந்தைகள் கடைசியாக வருமிடத்தைத் தனது இருப்பிடமாகக் கொண்டான் தாயுள்ளம் கொண்ட இறைவன்.

## கேளுங்கள் தரப்படும்

''திருக்கோயில்'' இதழ் வாசகர்கள் தங்களுக்குத் தோன்றும் ஐய வினாக்களை அனுப்பி வைக்கலாம். அவர்களுடைய வினாக்களுக்குரிய விடைகளை ஆன்றோர், சான்றோரிடம் பெற்று ''திருக்கோயில்'' இதழில் வெளியிடுவோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

இறந்தவர் உடலில் கடைசியில் நெய்யூற்றி ஆகுதி கொடுத்து வேள்வி செய்வதுபோல மனித உடலுக்குச் சடங்கு செய்கிறோம். சுடுகாடு ஒரு யாகபூமி. பரிசுத்தமானது. அதன் தூய்மை எங்குமே கிடையாது. அதனாலேயே நாம் வீடு திரும்பும்போது அந்த சாம்பல் நிறைந்த பூமியை மிதித்த கால்களைக் கழுவி உள்ளே வருகிறோம். சுடலையிலுள்ள வெண்பொடியை உடலெங்கும் பூசிக்கொண்டு இறைவன் சிவகணங்களுடன் ஆடியருளுகிறான். சிவகணங்களைப் பேய்கள் என அழைக்கின்றார். அது உயரிய அடியாரின் உன்னத நிலை என்பதனாலேயே புனிதவதி என்ற காரைக்கால் அம்மையார் பேயுருவம் இறைவனிடம் வேண்டிப் பெற்றார். எதை எரித்தாலும் சாம்பலாகும். சாம்பலை அழித்தால் அழியவே அழியாது. சாம்பலாகவே யிருக்கும். அத்தகைய வெண்ணீற்றை நாம் மூன்று பட்டைகளாக, மனத்தாலும், வாக்கினாலும், உடலாலும் சுத்தமாயிருப்போம் எனக் காட்டுவதற்காக அணிகிறோம். இத்தகைய வெண்ணீறு பூசிய சிவபெருமானது திருக்கோலத்தைக் கம்பன் **நீறணி கடவுள், நீறணிந்த கடவுள், நீறுபூசி** என்றெல்லாம் குறிக்கிறார்.

தோடுடைய செவி, காளை வாகனம், சந்திரகலை தரித்து, திருநீறு பூசி எழுந்தருளும் தோற்றம் எவருடைய மனத்தையும் கொள்ளை கொள்ளும். எனவே **என் உள்ளம் கவர் கள்வன்** என்றார். வேதத்தில் மகாருத்ரம் சிவபெருமானை **திருடர்கள் தலைவனே (தஸ்கராணாம் பதயே)** என அழைக்கும். நம் உள்ளத்தை இறைவன் கொள்ளை கொண்டால் நமது ஆணவம் அழிந்துவிடும்.

தாமரையில் வசிக்கும் பிரமன் பூசித்தபடியால் ஞானசம்பந்தப் பெருமான் அவதரித்தருளிய சீகாழித் தலத்திற்கு **பிரமபுரம்** எனப் பெயர் வந்தது.

ஞானசம்பந்தப் பெருமானது தேவாரத்தின் முதல் பாடலே இவ்வளவு அழகியது என்றால் முழுநூலும் எவ்வளவு அழகாகயிருக்கும்? அன்பர்கள் படித்து சிவனருள் பெற்று மகிழ்ச்சியுடன் வாழ இறைவனை வேண்டுகிறோம்!

அழியாத தரும தேவதையை வாகனமாகக் கொண்டு எழுந்தருளுவதால் உலக முதலானவற்றைப் **படைக்கும்** தொழிலையும் சந்திரனைக் காத்தருளி முடிமேலணிந்தருளிய கருணையால் **காக்கும்** தொழிலையும், பொடி பூசி என்றதால் உலக முதலான யாவற்றையும் **அழிக்கும்** ஆற்றலையும், நமக்குள்ளேயிருந்து நம்மையறியாமலே நம்மைச் செயல்படுத்தும் தன்மையைக் கள்வன் எனக் குறித்து **மறைக்கும்** தொழிலையும், பிரமனுக்கு அருளினார் எனக் குறித்து இறைவனது **அருள் செய்யும்** திறத்தையும் காட்டியருளினார். இவற்றை முறையே ஸ்ருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், திரோதனம், அனுக்கிரகம் என்பர் பெரியோர்.

இவ்வளவு பெருமைகளையும் கூறி நமக்குச் சிவபெருமான் திருவருள் கிடைக்குமாறு செய்த ஞான சம்பந்தப் பெருமானின் திருவடிகளை வணங்கி அவரது முதல் பாசுரத்தைப் பாடி இன்புறுவோமாக!

**தோடுடைய செவியன் விடையேறி ஓர் தூவெண்**
**மதிசூடிக்**
**காடுடைய சுடலைப் பொடிபூசி என் உள்ளம் கவர்**
**கள்வன்**
**ஏடுடைய மலரான் முனைநாள் பணிந்தேத்த**
**அருள் செய்த**
**பீடுடைய பிரமாபுரம் மேவிய பெம்மான்**
**இவனன்றே.**

ஞான சம்பந்தப் பெருமான் திருவடிகளே சரணம்!
கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்
திருச்சிற்றம்பலம்

★★★

# ஆலய வழி மருத்துவ அறிவியல்

— இரா. நிரஞ்சனா தேவி, எம்.ஏ., எம்.பில்.,

மனிதன் தனக்குப் பகுத்தறிவு நிலை ஏற்பட்ட காலந்தொட்டுத் தனக்கு துன்பம் ஏற்பட்டபோதும், தான் நோயினால் வருந்தியபோதும் இயற்கைச் சக்திகளை வணங்கியும், மூலிகைத் தாவரங்களை உண்டும் தன் உள, உடற் பிணிகளைப் போக்கி வந்திருக்கவேண்டும். நாளடைவில் தான் வணங்கிய இயற்கைச் சக்திகளுக்குப் பல்வேறு உருவங்கள் கொடுத்துக் கோயில்கள் எழுப்பி வழிபட்டு வணங்கி வரலானான். இவ்விதமாக க்டவுள் வணக்கம் எனும் ஆலய வழிபாடு என்பது மனிதனின் அன்றாட வாழ்வில் முக்கியப்பங்கு பெறலாயிற்று.

ஆலயங்கள் நமது நாட்டின் சமய சமுதாய பண்பாட்டின் மையமாக விளங்கியதுடன் கலைகளின் பிறப்பிடமாகவும், வளர்ப்பிடமாகவும் மட்டுமில்லாது கல்வி, பொருளாதார சமய, சமூக, ஆன்மீகம் மற்றும் மருத்துவத் துறையிலும் செய்து வந்துள்ள சேவைகள் பற்றிய செய்திகள் தெரிய வருகின்றன.

## ஆலயங்களில் ஆதுர சாலைகள்

ஆலயங்களிலேயே ஆதுரசாலைகள் அதாவது மருத்துவமனைகள் இருந்தமைக்கான சான்றுகள் பல நமக்குக் கிடைத்துள்ளன. காஞ்சிபுரம் அருகில் உள்ள திருமுக்கூடல் எனும் ஊரில் உள்ள கி.பி.1067 ஆம் ஆண்டைச் சார்ந்த வீர இராஜேந்திர சோழனின் கல்வெட்டு, அக் கல்வெட்டு இடம் பெற்றுள்ள வேங்கடசப்பெருமாள் கோவில் மண்டபத்தில் ஆதுலர் சாலை ஒன்று இருந்ததுபற்றியும் அங்கு ஓராண்டுத் தேவைக்கெனச் சேமித்து வைக்கப்பட்டிருந்த மருந்துகள், மருத்துவப்பணியாளர்களின் சம்பளம் ஆகியவை பற்றியும் தெரிவிப்பதுடன் அங்கு மருத்துவ அறிவியல் கற்பிக்கப்பட்டது என்றும் தெரிவிக்கிறது.

திருச்சி திருவரங்கநாதர் கோயில் வளாகத்தில் ஆரோக்கியசாலை இருந்தது பற்றியும் அதனைப் பராமரிப்பதற்காக கருடவாகன பட்டர் என்பாருக்கு கொடுக்கப்பட்ட நிலக்கொடை பற்றியும், இந்திய மருத்துவத்தின் தந்தையாகக் கருதப்படும் தன்வந்திரி எம் பெருமானின் சிலை பிரதிட்டை செய்யப்பட்டது குறித்தும், கஷாயம் எனப்படும் குடிநீர் ஔஷதம் எனும் பெயரில் தினமும் இறைவன் திருவரங்கநாதனுக்கு வழங்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது குறித்தும் 1415 ஆம் ஆண்டின் கருடவாகன பட்டரின் திருவரங்கம் கல்வெட்டு தெரிவிக்கிறது.

திருச்சி மாவட்டம் கோவிந்தபுத்தூர் கல்வெட்டு திருவிஜயமங்கை எனும் திருக்கோயிற் பணியாளர்களின் மருத்துவ உதவிக்காக கோயில் வருவாயிலிருந்து செலவு செய்யப்பட்ட விவரம் தெரிவிக்கிறது. மேலும், திருவிசலூர், திருப்புகலூர், குன்றத்தூர், மைசூரைச் சேர்ந்த சுகடூர் ஆகிய இடங்களிலுள்ள திருக்கோயில்கள் மருத்துவச்சாலைகள் அமைத்து மருத்துவப்பணி புரிந்துள்ள செய்திகளும் கல்வெட்டுகள் மூலம் தெரிய வருகின்றன.

## இறை நம்பிக்கையும் மருத்துவமும்

மக்களாய்ப் பிறந்த அனைவரும் நோயின்றி வாழவே விரும்புகின்றனர். பற்றற்ற நிலையில் வாழும் துறவிகள் கூட நோயற்ற வாழ்வு வாழ வேண்டும் என இறைவனை இறைஞ்சுகின்றனர். உடல் நலத்தோடு இயங்காமல் இயல்பான வாழ்விற்குத் தடையாகத் தளர்வாய் இருப்பதே நோய் அல்லது பிணி ஆகும். அத்தகைய பிணியானது உடற் பிணி, உளப் பிணி என இருவகைப்படும். அதை நீக்க மேற்கொள்ளும் முறையே மருத்துவம் ஆகும். உடல் அல்லது உள்ளம் பிணியுற்றாலும் உடலில் இயக்கமும் இயல்பும் தளர்ச்சியுறுகின்றன. அந்தத் தளர்ச்சியைக் கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபாடு செய் வதன் மூலம் நிவர்த்தி செய்து நலம் பெறலாம் என்பது பண்டு தொட்டு இன்று வரை நிலவும் தெய்வ நம்பிக்கை யாகும்.

மருத்துவக் கலையில் நோய்வராமைக்குரிய முற்காப்பு நெறிகளும் உண்டு; நோய் வந்தபின் செய்தற்குரிய மருத்துவமும் உண்டு. இறைவனே மருந்தாகவும் (Medicine) மருத்துவனாகவும் (Physician) நின்று அருள் செய்பவன் என்ற நம்பிக்கை கொண்ட மனிதன் அவ்விறைவனை 'மருந்தீசன்', 'வைத்தீஸ்வரன்', 'வைத்தியநாதன்' என்ற பெயர்களில்

வணங்கி வழிபாடு செய்துவரலானான். உலகின் எந்தப் பகுதியின் வரலாற்றை ஆய்ந்து பார்த்தாலும் கடவுளைப் போற்றும் அர்ச்சகர்களும், பூசித்த பூசாரி களுமேதான் மருத்துவர்களாகவும் இருந்து வந்துள்ள உண்மை தெரியவரும்.

ஆலயம் சென்று இறைவனை வழிபடும் பழக்கம் என்பது ஆன்மீகத் தத்துவ அடிப்படையில் அமைக்கப்பட்டதாக இருப்பினும் அந்த ஆன்மீகத் தத்துவத்துள் மருத்துவ அறிவியலும் மறைந்துள்ளது என்பது வியக்கத்தக்க உண்மையாகும். ஆலயம் சென்று இறைவனைவழிபடும்போது மன அமைதியும் நிம்மதியும் கிடைக்கிறது.

''ஆலயம் சிறப்படைய ஊர் நலமடையும்''
''ஆலயம் தொழுவது சாலவும் நன்று''
''கோயில் விளங்கக் குடி விளங்கும்''

என்பன போன்ற முதுமொழிகள் ஆலய வழிபாட்டின் முக்கியத்துவத்தை உணர்த்தவல்லன. இங்ஙனம் ஆலயம் சென்று இறைவழிபாடு செய்வதால் எந்தெந்த வகைகளில் நமக்கு மருத்துவ ரீதியான நன்மைகள் கிடைக்கப்பெறுகின்றன என்பதை இனி பார்ப்போம்.

### ஆலய விக்கிரகங்கள்

ஆலய விக்கிரகங்கள் பெரும்பாலும் ஒரு குறிப்பிட்ட தன்மைகொண்ட வெள்ளை அல்லது கருங்கற்களால் செதுக்கப்படுகின்றன. இவ்வகைக் கற்கள் இயல்பாகவே குறிப்பிட்ட அளவு மின்காந்த சக்தி உடையனவாக இருக்கின்றன. சிறிய விக்கிரங் களை ஆலயங்களில் பிரதிட்டை செய்வதற்கு முன்னால், விக்கிரகத்தின் அடியில் விலை மதிப்பற்ற தங்கம், வெள்ளி, வைரம் தவிர மந்திரத் தகடுகள் மற்றும் நூற்றுக்கும் மேலான மூலிகைகளும் கொண்டு நிரப்பப்படுகின்றன. பின்பு விக்கிரக நிர்மாணத்தின் போது பலவித அபிடேகங்களுடன் வேதங்களும் மந்திரங்களும் உச்சரிக்கப்படுகின்றன. பின்னரே விக்கிரங்கள் தெய்வீகத் தன்மை எய்துகின்றன.

கல்லைத் தவிர சிலைகள் செப்பினாலும் உருவாக்கப்படுகின்றன. சோழர்காலத்தைய சிலைகள் பெரும்பாலும் 'பஞ்சலோகம்' எனப்படும் தங்கம், வெள்ளி, செம்பு, பித்தளை, இரும்பு என்ற ஐவகை உலோகக் கலவையினால் செய்யப்பட்டவை. திருச் செங்கோட்டு மலைக்கோயிலின் மூலவிக்கிரக மான அர்த்தநாரீஸ்வரர் விக்கிரகமும், பழனிமலைக் கோயிலில் உள்ள முருகனது சிலையும் 'நவ பாஷாணம்' எனப்படும் ஒன்பது விதமான மூலிகை களின் சாற்றினைக்(ரசம்) கொண்டு சித்தர்களால் உருவாக்கப்பட்டவையாகக் கருதப்படுகின்றன.

இத்தகைய கடவுள் விக்கிரகங்களின் மீது நம்பிக்கைகொண்டவர்கள் அர்ச்சனைகள் செய்து வழிபடும்போது அவர்களது தொல்லைகள் நீங்கி மனம் அமைதிபெற்று உளவியல் சிகிச்சை உணர்வை பெறுகின்றனர். இவ்விதமாக சிலைகளை வழிபடும் பழக்கமானது முதன்முதல் லிங்க வழிபாட்டுடன் துவங்கி இருக்கவேண்டும். ஆந்திராவில் குடிமல்லம் என்ற இடத்தில் கிடைத்துள்ள கி.மு.2 ஆம் நூற் றாண்டைச் சேர்ந்ததாகக் கருதப்படும் லிங்க வடிவச் சிலைதான் தென்இந்தியாவின் முதன்மையான லிங்கச் சிலையாகக் கருதப்படுகிறது. எனவே தமிழ கத்தைப் பொறுத்தவரை விக்கிரக வழிபாடு என்பது லிங்க வணக்கமாகவே துவங்கியிருக்க வேண்டும்.

### விக்கிரக வழிபாடும் மருத்துவச் சிறப்பும்

பழங்காலம் முதல் விக்கிரக வழிபாட்டில் அபிடேகம், அர்ச்சனை, நைவேத்தியம், தீபாராதனை என்பன சிறப்பிடம் பெற்று வருகின்றன. ஆராதனை என்பது பூசை, வழிபாடு என்ற பொருள்களைக் கொண்ட சொல்லாகும். தொடர்ந்து ஆராதனை நடை பெறாத ஆலயங்களில் சிறப்பு மங்கிப் போய்விடு கின்றது. பூசைகள் செய்யாவிடில் ''ஆற்றரும் நோய் மிகும்'' என்கிறார் திருமூலர். வேதகாலந்தொட்டே இத்தகைய ஆராதனைகள் வழக்கில் இருந்துள்ளமை தெரியவருகிறது.

### அபிடேகம்

அபிடேகம் என்பது விக்கிரகங்களைத் 'திருமுழுக்காட்டுதல்' என்பதாகும். பொதுவாக அபிடேகமானது எண்ணெய், நெய், மஞ்சள்நீர், சந்தனம், தயிர், பால், பழம், தேன், பஞ்சாமிர்தம், திருநீறு ஆகிய பொருட்களைக்கொண்டு விக்கிரகங் களை முழுக்காட்டுவதாகும். இந்த அபிடேகப் பொருட்கள் விக்கிரங்களின் மீது படிந்து அடியிலுள்ள மூலிகைப் பொருட்களுடன் கலந்து வருகின்றன. இவ்வாறு செய்யப்பட்ட அபிடேகப் பொருளை தெய்வ நம்பிக்கை கொண்ட ஒருவர் உட்கொள்ளும் போது அதன் மருத்துவக் குணமும், அவரது தெய்வ நம்பிக்கை எனும் உளவியல் சக்தியும் சேர்ந்து அவரது உள, உடற்பிணிகள் நீக்கி நலம் பெறச் செய்கின்றது.

இரண்டாம் வரகுணவர்மன் காலத்தில் திருச்செந்தூர் கோயிலில் ஒருநாள் பூசைக்கு எனக் கட்டளையிடப்பட்ட பொருட்களில் பால், சந்தனம், மஞ்சள், நெய், இளநீர் போன்ற அபிடேகப் பொருட்கள் இடம்பெற்றுள்ளன என்று திருச்செந்தூர் கல்வெட்டு மூலம் தெரியவருகிறது. மூன்று நேரங் களில் நடைபெறும் திருமஞ்சனம் பற்றி முதல்

இராசேந்திரனின் கல்வெட்டொன்று தெரிவிக்கின்றது திருமஞ்சனத்துக்கு தங்கம், வெள்ளி, பொன், பஞ்ச லோகப் பாத்திரங்கள் கொடையாகக் கொடுக்கப் பட்ட விபரங்களும் கல்வெட்டுகள் மூலம் தெரிய வருகின்றன.

''ராஜராஜேச்சுவர முடையார் ஆடியருளும்
திருமஞ்சன
நீரிலும் தண்ணீர் மீதிலும் இடப்பெறும் செண்பக
மொட்டுக்கும்,
ஏலவரிசிக்கும், எலுமிச்சத்துக்கும் வேண்டும்
நிபந்தம்''

என்ற பேரரசன் தஞ்சைக் கல்வெட்டுச் சாசனம் மூலம் திருமஞ்சனநீரில் செண்பகமொட்டு, ஏலம், எலுமிச்சை முதலிய போடப்பட்ட விபரம் அறியமுடிகிறது.

இவ்வாறு செய்யப்படும் விக்கிரக அபிடேக நீர் கருவறையிலிருந்து சிறுவடிகால் மூலம் அருகி லுள்ள கோயில் குளத்தைச் சென்று அடைகின்றது. ஆகவே, கோயில் குளங்களிலுள்ள நீர் மருத்துவ குணம் நிறைந்த அபிடேக நீருடன் கலந்திருப்பதால், அக்குளங்களில் நீராடும் பக்தர்களின் பிணிபோக்கி நலமளிக்கும் தன்மை வாய்ந்ததாக இருக்கிறது. திருச்சி மாவட்டம் திருமழபாடியிலுள்ள வைத்தியநாத சுவாமி கோயில் குளத்தில் ஒரு மண்டலம் (42 நாட்கள்) தொடர்ந்து குளித்து வந்தால் குட்டநோய் குண மடையும் என்று நம்பப்படுகிறது. ('திருமழபாடி' எஸ். ராமச்சந்திரன் ப.154)

அபிடேகப் பொருள்களில் மஞ்சள் ஒரு கிருமிநாசினி, சந்தனம் உடல் வெப்பத்தைத் தணித்து, குளிர்ச்சியை அளித்து 'வேர்க்குரு' போன்ற வெப்ப நோய்களைப் போக்க வல்லது. தயிர் உடலின் எரிச்சலைப் போக்கவல்லது. தயிர் உடலின் எரிச் சலைக் போக்கி, ஜீரணசக்தியை அளிக்கக்கூடியது. நெய் உடல் சூட்டைத் தணித்து, கபத்தை வெளி யேற்றி, தோல் சம்பந்தமான கோளாறுகளைப் போக்கவல்லது. தேன் நோய் எதிர்ப்புச் சக்தி உடையது.

## திருநீறு

பசுவின் சாணத்தை உலரவைத்து எரித்துக் கிடைக்கும் சாம்பலே திருநீறாகிறது. வடமொழியில் இது 'விபூதி' என்றழைக்கப்படுகிறது. பசுவின் சாணம் கிருமிநாசினியாகும். எல்லா மதத்தினரும் தம் வீடுகளிலும், வீட்டு முற்றங்களிலும் பசுவின் சாணம் கொண்டு மெழுகும் வழக்கம் இருந்துவருவது யாவரும் அறிந்ததே. ''பசுஞ்சாணத்தால் வீட்டை மெழுகுவதால் அந்த வீட்டிற்கு அணுக்கதிர் இயக்கத்தால் எந்த ஆபத்தும் ஏற்படாது என்ற உண்மையை ரஷ்ய விவசாயத் தூதுக்குழுவினர் மத்திய தகவல் ஒலிபரப்புத்துறை அமைச்சர் திரு. கே.கே.ஷா விடம் கூறியிருக்கின்றனர். தங்கத்தை விட தங்க பஸ்பத்திற்கு அதிக ஆற்றல் இருப்பது போல், சாணத்தைவிட சாணத்தைச் சுட்டெரித்து பெறப்பட்ட திருநீற்றுச் சாம்பலுக்கும் நச்சுக் கிருமி களை ஒழிக்கும் ஆற்றல் அதிகம் என்பது விஞ்ஞான ரீதியாக ஒப்புக் கொள்ளக்கூடிய உண்மையாகும்'' (திருநீற்றின் பெருமையும் அதனை அணிவதால் வரும் நன்மைகளும், மதுரை ஆதீன கர்த்தரின் அரிய ஆராய்ச்சி நூல், 1979).

சாம்பலுக்கு நீரை உறிஞ்சும் ஆற்றல் உண்டு. திருநீற்றை நெற்றியில் பூசிக்கொள்வதால் மண்டை யோட்டுப்புழைகளில் (Sinus) உள்ள மிகையான நீரினை உறிஞ்சி, எலும்புப்புழை அழற்சிக் கோளாறு (Sinusitis) காரணமாக ஏற்படும் தலைக்கனம், தலைவலி போன்றவற்றை நீக்குகிறது. இந்த மருத்துவ உண்மையை உணர்ந்தே, மக்களனைவரும் இதன் பயன் அடையவேண்டும் என்ற நோக்கில் திரு நீற்றைப் பூசனைப் பொருட்களில் ஒன்றாகப் பயன் படுத்தியுள்ளனர் எனத் தெரிகிறது. இதன் மருத்துவப் பயனை உணர்ந்த ஔவையாரும்

''நீறில்லா நெற்றி பாழ்''

என்று பாடியுள்ளார். கிறித்தவர்கள் கொண்டாடிவரும் ''சாம்பற்பூசும் திருநாளும்'' திருநீற்றின் பெருமையை உணர்த்துவதாக இருக்கின்றது. திருநீற்றை நெற்றி யிலும், உடம்பிலும் பூசி பண்டைய மக்கள் தம் உடம்பை நோயினின்றும் பாதுகாத்து வந்திருக்கின் றனர். 'திருஞானசம்பந்தர் திருநீற்றுப் பதிகம் பாடி, வெப்புநோயினால் துன்புற்றுக் கொண்டிருந்த கூன்பாண்டியனது உடம்பில் திருநீறு பூசி வெப்பு நோயைக் குணப்படுத்தினார்', (திருஞான: 770) என்பதன் மூலம் திருநீற்றின் மருத்துவக்குணம் பற்றி அறிந்துகொள்ளலாம். திருநீற்றால் பாம்பின் நஞ்சு கற்றும் பெருவழக்கு, ''திருநீற்றால் பை அவிந்த நாகம்'' என்ற நாலடியார் பாடல் வரிகளால் அறியப்படுகிறது.

திருச்செந்தூர் முருகன் கோயிலில் கொடுக்கப் படும் ''இலை விபூதிப் பிரசாதம்'' என்பது பன்னீர் மரத்தின் 12 நரம்புகள் கொண்ட இலைகளில் வைத்துக் கொடுக்கப்படுகிறது. இந்த இலை விபூதியை முருகப் பெருமான் விசுவாமித்திரருக்குக் கொடுத்து அவ ருடைய காசநோயை நீக்கச் செய்ததாகத் தலபுராணம் கூறுகிறது. அபிநவகுப்தா எனவான் காசநோய் பெற்று வருந்திய ஆதிசங்கரர் இந்த இலைவிபூதியை உட்கொண்டு காசநோய் நீங்கப் பெற்றார் என்பர்.

இராசேந்திரனின் கல்வெட்டொன்று தெரிவிக்கின்றது

''நின் இலை விபூதியைக் கண்டால் காக்கை
வலிப்பு, காசம், கயம், குட்டம் முதலிய
நோய்கள் நீங்கும், பூதம், பிசாசு
தீவினை யாவும் விட்டு ஓடும்''

என்ற பாடல் வரிகள் திருநீற்றின் பெருமையைப் புலப்படுத்துகின்றன.

(ஆதிசங்கரர், சுப்பிரமணிய புஜங்கம் 25-ஆம் பாடலின் தமிழ்மொழி பெயர்ப்பு)

இந்து மற்றும் இஸ்லாமிய மதத்தினரிடையே விபூதியை மந்திரித்துக் கொடுக்கும் வழக்கம் இருந்து வருகிறது யாவரும் அறிந்ததே, விஜய நகர அரசர்கள் காலத்தில் ''விபூதிக்காணிக்கை'' என்ற வரி வசூலிக் கப்பட்ட விபரம் கல்வெட்டு மூலம் தெரிகிறது.

## தீர்த்தம்

அபிடேகம் செய்யப்பட்டுப் புனிதமடைந்த நீர் ''தீர்த்தம்'' என்றாகிறது. அபிடேகம் செய்யப்பட்ட நீர் விக்கிரகத்திலுள்ள மருத்துவக் குணங்களைப் பெற்றுவிடுவதால் தொடர்ந்து ஆலயம் சென்று தீர்த்தம் உட்கொள்ளும் பக்தர்கள் நோயின்றி நலவாழ்வு பெற முடிகிறது. விஷ்ணு கோயில்களில் துளசி இலை, துளசி இலையை ஊறவைத்த நீராகிய துளசி தீர்த்தம் ஆகியவற்றைப் பிரசாதமாக தருவது இக்காலத் திலும் நடைமுறையில் உள்ளது. பல்வேறு நோய் களைக் குணப்படுத்தும் அற்புதசக்தி இந்த துளசிக்கு உண்டு. காய்ச்சல், கீல்வாதம் ஆகிய நோய்களுக்குத் துளசி அருமருந்தாகப் பயன்படுகிறது. நச்சுமுறிவு, கிருமி ஒழிப்புக்கும் துளசிச்சாறு நல்ல மருந்து. குழந்தைகளுக்கு ஏற்படும் கோழை சம்பந்தப்பட்ட நோய்களுக்கும், மார்புச்சளி, இருமல், அழற்சி போன்றவற்றிற்கும் துளசிச்சாறு மருந்தாகப் பயன் படுகிறது. குழந்தைகளின் வயிற்றுக் கோளாறு களுக்குத் துளசி வேர் நல்லமருந்தாகிறது. துளசிச் செடியானது கரிய மிலவாயுவை (Carbondioxide) அதிக அளவில் கிரகித்து பிராணவாயுவை (Oxygen) அதிக அளவில் வெளியிடும் தன்மையுடையது. இந்த அறிவியல் உண்மையை உணர்ந்து தான் வீடுகளிலும் கோயில்களிலும் துளசிச் செடி வளர்க்கும் மரபினை ஒரு சமயநெறியாகக் கொண்டுள்ளனர் என்று எண்ணத் தோன்றுகிறது. இவ்வாறு அரிய பல மருத்துவப் பண்பு கொண்ட துளசி இலையின் தீர்த்தம் விஷ்ணு கோயில்களில் பிரசாதமாகக் கொடுக்கப்படுவது பக்தர்களின் உடல் நலத்தின் அடிப்படையில் அமைந்த ஒரு நெறிமுறை யாகும்.

## ஆராதனை

கடவுள் விக்கிரங்களுக்கு தூப ஆராதனை, தீப ஆராதனை, கற்பூர ஆராதனை செய்யும்போது அந்த ஆராதனைப் பொருட்களிலிருந்து வெளிப் படும் புகை மருத்துவத் தன்மை கொண்டதாக இருப்பதால் காற்று வெளியில் பரவிக் கிடக்கும் நச்சுக் கிருமிகளை ஒழிக்கும் கிருமிநாசினியாகச் செயல்படுகிறது. கற்பூரத்தின் ஆவியும் மணமும் சோர்வுற்ற ஒருவனுக்குப் புத்துணர்ச்சி அளிக்க வல்லது. கற்பூர ஆரத்தியைக் கைகளினால் தொட்டு, கண்களில் ஒற்றிக் கொள்ளும்போது கண்கள் புத் தொளியும் புத்துணர்வும் பெறுகின்றன. காற்று வெளியிலுள்ள 'வைரஸ்' (Virus) என்னும் கண்ணுக்குத் தெரியாத நச்சுக்கிருமிகளைத் அழித்து காற்றைத் தூய்மைப்படுத்தும் தன்மைபடைத்தது இந்தக் கற்பூரம். இந்த அடிப்படையில்தான் கற்பூர ஆராதனை ஆலயவழிபாட்டில் ஒருசிறப்பு அம்சமாகக் கருதப் படுகிறது. இந்துக்கோயில்களில் வழங்கப்படும் கற்பூரதீர்த்தம், உட்கொள்ளும் பக்தர்களின் உடலியக்கத்தைச் சரிசெய்யும் 'சர்வ நிவாரணி தீர்த்தமாக' விளங்குகிறது. திருக்கிழ்க் கோட்டத்து இறைவனுக்கு கற்பூரவிளக்கு எரிப்பதற்காக மாடிலன் பட்டன் மகாதேவன் நாராயணன் என்பான் 30 மஞ்சாடிப் பொன் கொடையாகக் கொடுத்த விவரம் முதற்பராந்தகச் சோழனின் கி,பி 947 ஆம் ஆண்டைச் சார்ந்த கல்வெட்டு மூலம் தெரிகிறது. முதலாம் குலோத்துங்க சோழனின் கி.பி.1101 ஆம் ஆண்டுக் கல்வெட்டு திருப்புகலூர் அக்னீஸ்வரர் கோயிலுக்கு தானதுங்க சதுர்வேதி மங்கலத்து பெருங்குறி மகாசபையோர் கற்பூரத் திரு நந்தா விளக்கு வைத்த செய்தியைக் குறிப்பிடுகிறது. பழங்காலத்தில் கற்பூரத் திற்கு மக்கள் அளித்துள்ள முக்கியத்துவம் இக் கல்வெட்டுச் செய்திகள் மூலம் உணரப்படுகிறது.

## விக்கிரக அபிடேக, ஆராதனைகளின் அறிவியல் பயன்பாடு

கோயில்களில் விக்கிரக அபிடேகம் மற்றும் ஆராதனகள் செய்யும்போது கர்ப்பக்கிருகத்தில் நிகழும் அறிவியல் மாற்றங்கள் பற்றியும் அவற்றின் விளைவுகள் பற்றியும் குற்றாலம் பராசக்தி கல்லூரியின் ஆய்வுக்குழு மேற்கொண்ட ஆய்வின் முடிவுகள் மிகவும் பயனுள்ள கருத்துகளாக இருப்பதால், அவற்றை இங்கு குறிப்பிடுவது மிகவும் பொருத்த மானதாக இருக்கும்.

அபிடேகங்கள் செய்து, ஒவ்வொரு அபிடேகத்தின் போதும் நிகழ்கின்ற மின்கடத்தும் திறன் அளவு மாறுபடுவதை சோதனைகளின் மூலம் கணித்துள் ளனர். தயிர், பால், நீர் மற்றும் சந்தன அபிடேகங் களின் போது மின்கடத்தும் திறன் கூடுதலாகவும் எண்ணெய், தேன், விபூதி மற்றும் குங்கும அபிடேகங் களின் போது அத்திறன் குறைவாகவும் ஆனால் நிலையாகவும் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. குங்குமம், சந்தனம், மஞ்சள், மற்றும் நீர் அபிடேகங் களின் போது கர்ப்பக்கிருகத்தினுள்ளிருக்கும் காற்று வெளி எதிர் மின்னோட்டம் பெறுகிறது. தவிர, அபிடேகத்தினால் ஏற்படும் குளிர்ச்சியின் காரணமாக அக்காற்றுவெளியின் ஈரப்பதம் அதிகமாகி, வெளிக் காற்றிலிருந்து பிராண வாயுவின் தனிமங்களை அதிக அளவில் ஈர்த்துக் கொள்கிறது. இத்தகைய சூழ்நிலை யில் அர்ச்சகரால் சொல்லப்படும் மந்திர ஒலி விக்கிர கத்தின் மீதுபட்டு அதிவேகத்துடன் எதிரொலித்து சுற்றியுள்ள காற்றுமண்டலத்தை அதிர்வடையச் செய்து பக்தர்களைச் சென்றடைகிறது. இவ்வாறு மின்காந்த அதிர்வுகளுடன் கூடிய காற்று பக்தர்களின் உடலுக்கு நலனளிக்கிறது. விக்கிரக ஆராதனை மற்றும் அபிடேகங்களின் மூலம் பக்தர்களுக்குப் புண்ணியம் கிடைக்கிறது என்று கூறப்படும் ஆன்மீகக் கருத்து மேலே கண்டறியப்பட்ட அறிவியல் உண்மை யில் அடிப்படையில் அமைந்துள்ள கருத்தே ஆகும்.

## ஆலய வழிபாட்டின் மருத்துவ முக்கியத்துவம்

### *1. வலம் வருதல்:*

ஆலயங்களில் அமைந்துள்ள பிரகாரங் களைச் சுற்றி வருதல் ஆலயவழிபாட்டில் ஒரு கட்டுப்பாடான நெறியாகவே நம் முன்னோர்கள் வகுத்துள்ளனர். விக்கிரகங்களையும் நவக்கிரகங் களையும் ஒன்று, மூன்று அல்லது ஒன்பது முறை சுற்றி வலம் வர வேண்டும் என்று விதிமுறை வகுத் துள்ளனர். இவ்வாறு வலம் வருதல் பக்தர்களுக்கு உடற்பயிற்சியாக அமைவதுடன், கடவுள் நாமத்தை உச்சரித்துக் கொண்டே வலம்வரும் பக்தர்களுக்கு மனதை ஒருமுகப்படுத்தும் உள்ப்பயிற்சியாகவும் அமைகிறது. இதனால் மனஅமைதி பெறமுடிகிறது. எனவேதான், ஒன்பதுமுறை சுற்றிவரும் பக்தர்கள் அதிக அளவில் உடலுக்கும் உள்ளத்திற்கும் நன்மை பெற முடிகிறது.

நவக்கிரகங்களைச் சுற்றிவலம் வரும்போது மனிதஉடலிலுள்ள மின்காந்த சக்தியும், விக்கிரங் களின் மின்கடத்தும் சக்தியும் ஒன்றொடொன்று இணைந்து உடலில் ஒரு வித புத்துணர்வை அளிக்கிறது. இவ்விதமான செயல்பாடு உடலில் நிகழ சிறிதுநேரம் தேவைப்படுமாகையால் நவக்கிரகங் களை ஒன்பது முறை சுற்றிவருதல் அவசியம் என்று ஆன்றோர்கள் நிர்ணயித்துள்ளனர்.

### 2. நந்தவனங்கள்

கோயில்களின் அருகில் வில்வம், வன்னி, வேம்பு, கடம்பு, ஆல், அரசு, நந்தியாவட்டை, மருதோன்றி, துளசி மற்றும் பூசைக்குப் பயனளிக்கக் கூடிய பல்வேறு வன்கயான பூச்செடிகள் ஆகியவற் றுடன் கூடிய நந்தவனங்கள் அமைக்கப்பட்டு, கோயில்களால் பராமரிக்கப்பட்டுள்ளன. இவை யாவும் சிறந்த மருத்துவத் தாவரங்களாகும். கோயில் பிரகாரங்களைச் சுற்றிவரும் பக்தர்கள் இந்த நந்த வனத்திலிருந்து வீசும் மருத்துவகுணம் நிறைந்த காற்றை உட்கொள்வதால் நுரையீரல் சுத்தமடைந்து, இரத்தஓட்டம் சீரடைந்து உடலும், உள்ளமும் புத்துணர்வு பெறமுடிகிறது.

அதிகாலைப் பொழுதில் சூரிய ஒளிக்கதிர் களில் ஓஸோன் (Ozone) மற்றும் அல்ட்ரா கதிர் களும் ( Ultra rays) இருக்கின்றன. சில நோய்களைப் போக்கி நலமளிக்கும் சில சக்திகள் இக்கதிர்களுக்கு உண்டு. குறிப்பாக மார்கழி மாதத்தில் அதிகாலை 4 மணிமுதல் 6 மணி வரையிலான காலத்தில் இக் கதிரியக்கங்கள் பூமியை வந்தடைகின்றன. மேலும் இக்காலை வேளையில் அரசு, வேம்பு ஆகிய வற்றின் இலைகள் இக்கதிரியக்க சக்திகளை அதிக அளவில் ஈர்த்துக் கொள்கின்றன. ஆகவே, இவ் வேளைகளில் இந்த மரங்களிலிருந்து வீசும் காற்று உடலுக்குப் பல நலன்களை அளிப்பதாக உள்ளது. இந்த மரங்களிலிருந்து வீசும் காற்று உடலுக்குப் பல நலன்களை அளிப்பதாக உள்ளது. தினமும் அதி காலையில் குளித்துவிட்டு கோயிலுக்குச் சென்று வழிபட்டு வரவேண்டும் என்றும், அரசமரத்தடியில் பிள்ளையார்சிலை வைத்து, தினமும் அதிகாலையில் அரசமரத்தைச் சுற்றிப் பிள்ளையாரை வழிபட வேண்டும் என்றும் இறைவழிபாட்டு நெறியாக ஆன்றோர்கள் வகுத்திருப்பது மேற்கண்ட அறிவியல் உண்மையின் அடிப்படையில் அமைந்ததேயாகும்.

கோயிலும் கோயிலைச் சுற்றியுள்ள திரு வீதிஞம் தூய்மையாகவும் சுத்தமாகவும் இருக்க வேண்டும் என்பது பண்டைக்காலத்திலேயே மக்கள் கொண்டிருந்த கருத்தாகும். அப்பரடிகள் ஆலய வளா கத்தைத் தூய்மை செய்ததுடன் அதனைச் சார்ந்த வீதி களையும் தூய்மை செய்தார் என்றும், இதற்காக ''உழவாரப்படை'' ஒன்றை அவர் சுமந்து செல்வது வழக்கம் என்றும் பெரியபுராணம் கூறுகிறது. ஆல யத்தையும் ஆலயம் சார்ந்த வீதிகளையும் பசுஞ்சாணம்

''உழவாரப்படை'' ஒன்றை அவர் சுமந்து செல்வது வழக்கம் என்றும் பெரியபுராணம் கூறுகிறது. ஆலயத்தையும் ஆலயம் சார்ந்த வீதிகளையும் பசுஞ்சாணம் கொண்டு தூய்மை செய்யும் பழக்கம் பாண்டியர் காலத்தில் இருந்ததை குலசேகரபாண்டியனின் 8 ஆம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு தெரிவிக்கிறது. நோய் வராமலிருக்க தூய்மையான சுற்றுப்புறச்சூழல் மிகவும் அவசியம் என்ற உணர்வு அன்றைய மக்களிடம் இருந்திருக்கிறது.

## முடிவுரை:

இவ்வாறு ஆலயவழிபாட்டின் ஒவ்வொரு செயற்பாடும் மருத்துவ அறிவியலின் அடிப்படையில் அமைத்துள்ளதென்றும், அந்த மருத்துவ அறிவியலின் மூலம் கிடைக்கப்பெறக்கூடிய மருத்துவப் பயன்கள் பாமரமக்களுக்கும் கிடைக்கும் வகையில் ஆலயவழிபாட்டு முறைகளில் வழிவகைகள் செய்து வைத்து, தெய்வபக்தியின் மூலம் அந்நெறிமுறைகளை ஒழுங்குமுறை தவறாமல் கடைப்பிடித் தொழுக வழிவகுத்து வைத்துள்ளனர்.

பழங்காலத்தில் எல்லா மக்களுக்கும் கல்வியறிவு கிடைக்காததாலும் பல்துறை அறிவையும் ஒருவன் தன் வாழ்நாளில் பெறமுடியாது என்பதாலும் பல அறிவியல் உண்மைகள் பரம்பரை பரம்பரையாகப் பயன்படவேண்டும் என்பதற்காக நம்பிக்கையின் வடிவில் கடவுள்பக்தி மூலம் ஒருவித அச்சத்தையும் மனதில் உருவாக்கி ஆலயங்களுக்குச் செல்லும் கட்டாயத்தையும் ஏற்படுத்தி அதனால் கிடைக்கும் நன்மைகளை மருத்துவ ரீதியாகவும் ஆன்மீக ரீதியாகவும் மக்கள் தங்கள் வாழ்க்கையில் அடைந்து நலம் பெறுமாறு தாம் கண்டறிந்த உண்மைகளை நம்மிடையே நம் முன்னோர்கள் விட்டுச் சென்றுள்ளனர். உண்மைகள் மற்றும் நம்பிக்கைகளின் அடிப்படையில் எழுப்பப்படுவதே வாழ்க்கை. அந்நம்பிக்கையை வளர்ப்பன ஆலயங்கள்.

ஆகவே, ஆலய வழிபாட்டுமுறைகளை ஒழுங்காகக் கடைப்பிடித்தொழுகுபவர்கள் நோய் பாதுகாப்பு முறைகளைக் கடைப்பிடிப்பவர்களாகவும் விளங்குகிறார்கள். மேலும் சாதாரணமாக ஏற்படுகின்ற உடல் நோய் மற்றும் உள நோய்களுக்காக கலங்காமல் தெய்வநம்பிக்கையின் மூலம் மனோபலம் பெற்று நலமடைகின்றனர். தவிர இறைவழிபாட்டு நெறிமுறைகளை உண்மையாகவே கடைப்பிடித்தொழுகுபவர்கள் அன்றாட வாழ்விலும் ஒழுக்கம், நேர்மை மற்றும் உயர்பண்புகளுடன் கூடியதொரு நல்வாழ்வு வாழ்பவர்களாகவும் இருக்க முடிகிறது.

ஆனாலும், அந்நாளில் கடைப்பிடிக்கப்பட்ட வழிபாட்டு நெறிமுறைகளுக்கும் இந்நாளில் கடைப்பிடிக்கப்படும் வழிபாட்டு நெறிமுறைகளுக்கும் அடிப்படையில் பெரிய மாறுபாடுகள் இல்லாவிடினும், மக்கட்பெருக்கம், மற்றும் அறிவியல் முன்னேற்றம் காரணமாக சிலவேறுபாடுகள் இருக்கலாம். அதன் காரணமாக வழிபாட்டுப் பயன்பாடுகளில் குறைபாடுகள் காணப்படலாம். இந்த வேறுபாடுகளையும் குறைபாடுகளையும் ஆராய்ந்து, காலத்திற்கேற்ப தேவையான மாறுதல்கள் செய்து மக்களிடையே தெய்வபக்தி, ஆலய வழிபாடு ஆகிய வற்றில் நம்பிக்கையை வளர்த்து, ஆலய வழிபாட்டில் அரும்பெரும் மருத்துவப் பலன்களை மக்கள் யாவரும் நன்கு உணருமாறு செய்வது மக்கள் யாவரும் நலமுடன் வாழ வழிவகுக்கும் என்று உறுதியாக நம்பலாம்.

## துணைநூற் பட்டியல்


1. ஆலயங்களும், ஆகமங்களும், நஜன், பிரதிபா பிரசுரம், சென்னை - 44 , 1983.
2. ஆலயங்கள் சமுதாய மையங்கள், தவத்திரு குன்றக்குடி அடிகளார், வானதி பதிப்பகம் 1990.
3. இந்து மதத்தின் இயற்கை களஞ்சியம், எஸ்.என். முரளிதர். ஹோலி பப்ளிகேஷன்ஸ், ஈரோடு, 1990.
4. திருச்செந்தூர் முருகன் கோயில் வரலாறு, என். கல்யாண சுந்தரம், திருக்குமரன் பதிப்பகம், திருச்செந்தூர், 1980.
5. திருநீற்றின் பெருமையும் அதனை அணிவதால் வரும் நன்மைகளும் மதுரை ஆதின கர்த்தர், ஐந்தாம் பதிப்பு,1979.
6. திருநீறும், சிவமணியும், ப. இராமநாதன் பிள்ளை, கழகவெளியீடு.
7. திருமழபாடி, எஸ்.ராமச்சந்திரன். தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை. சென்னை, 1928.
8. தெய்வீக வாழ்வின் விஞ்ஞான ரகசியங்கள், டாக்டர். சாது.சு. ஸ்ரீநிவாஸ் அறந்தாங்கி, 1947.
9. நறுமணப்பொருள்கள், ஜே.எஸ்.பீருதி, நேஷனல் புக் டிரஸ்ட். இந்தியா, புதுதில்லி 1984.


## கல்வெட்டுச்சான்றுகள்:


1. **Annual Report On Epigraphy**

   267, 347/1899; 235/1911; 70/1920; 270/1921; 95/1927 - 28.

2. **Epigraphica Indica**

## வினாவும் விடையும்

**1. சித்தர்கள் சமாதி கொண்டருளிய தலங்களின் பெயர்களைக் கூறுக.**

| | | |
|---|---|---|
| 1. | திருமூலர் | - சிதம்பரர் |
| 2. | நந்தி | - காசி |
| 3. | கொங்கணர் | - திருப்பதி |
| 4. | நந்திதேவர் | - சீர்காழி |
| 5. | தன்வந்திரி | - வைத்தீஸ்வரன் கோயில் |
| 6. | கமல முனி | - திருவாரூர் |
| 7. | வால்மீகி | - எட்டுக்குடி |
| 8. | சட்டைமுனி | - திருவரங்கம் |
| 9. | கருவூர்த்தேவர் | - கருவூர் |
| 10. | போகர் | - பழநி |
| 11. | சுந்தரானந்தர் | - மதுரை |
| 12. | மச்சமுனி | - திருப்பரங்குன்றம் |
| 13. | இராமதேவர் | - அழகர்மலை |
| 14. | கும்பமுனி | - திருவனந்தபுரம் |
| 15. | கோரக்கர் | - ஸ்ரீசைலம் |
| 16. | குதம்பைச் சித்தர் | - திருக்கழுக்குன்றம் |
| 17. | பதஞ்சலி | - இராமேசுவரம் |
| 18. | இடைக்காடர் | - திருவண்ணாமலை |
| 19. | அகப்பேய்ச்சித்தர் | - விருத்தாசலம் |
| 20. | கவரிமான் முனிவர் | - திருக்காளத்தி |
| 21. | பாம்பாட்டிச் சித்தர் | - திருக்கடவூர் |

**2. பிரதோசம் என்பது யாது? அது பற்றிய புராணச் செய்தியைக் கூறுக.**

சுக்கிலபட்சம் (வளர்பிறை) கிருஷ்ணபட்சம் (தேய்பிறை) என்பவற்றில் வருகின்ற திரயோதசி திதியிலே மாலை நாலரை மணி முதல் ஏழரை மணி வரை உள்ள காலம் பிரதோசம் ஆகும்.

சிவபெருமான் ஆலாலம் என்னும் நஞ்சினை உண்டருளிய நாள் ஏகாதசி. அந்நாளில் தேவர்கள் அனைவரும் உணவருந்தாமல் இருந்து சிவபெருமானைப் பூசித்தனர்.

தேவர்கள் செய்த பூசனைக்கு மகிழ்ந்த சிவபெருமான் அவர்களுக்கு அமுதத்தை வழங்கினார். தேவர்கள் தங்கள் பூசையை முடித்துக் கொண்டு இறைவன் அளித்த அமுதத்தை அருந்திய நாள் துவாதசி.

மறுநாள் திரயோதசி நாளில் சூரியன் மறைவதற்கு மூன்றேமுக்கால் நாழிகை முதல் ஏழரை நாழிகை சிவபெருமான் துன்பத்தில் ஆழ்ந்து வருந்தும் உயிர்களெல்லாம் இன்பம் அடையும் பொருட்டு தமது திருக்கையில் டமருகம் ஏந்தி உமாதேவியார் காணும்படி திருநடனம் செய்தருளினார். அந்தக் காலமே பிரதோச காலம் ஆகும்.

பிரதோச தினத்தன்று சனிக்கிழமையும் சேர்ந்து வருமாயின் அது மிகவும் சிறப்பானதாகும்.

பிரதோச விரதம் நோற்க விரும்புவேன். சித்திரை, வைகாசி, ஐப்பசி, கார்த்திகை மாதங்களில் ஏதேனும் ஒன்றில் வரும் சனிப் பிரதோசம் முதலாக அனுட்டித்துப் பயன்பெறலாம்.

பிரதோச நாளில் திருக்கோயிலுக்குச் சென்று விதிப்படி அன்புடன் வழிபட்டால் எல்லா நலங்களும் பெறலாம்.

**3. சப்தவிடங்கத் தலங்கள் என்பன யாவை? அவ்வத் தலங்களுக்கு முறையே உரிய நடனம் யாது?**

திருவாரூர், திருநள்ளாறு, திருநாகைக் காரோணம், திருக்காறாயில், திருக்கோளிலி, திருவாய்மூர், திருமறைக்காடு என்னும் ஏழு தலங்களும் சப்தவிடத் தலங்கள் என்று கூறப்படும்.

சப்தம் - ஏழு
விடங்கர் - தியாகராஜர், உளியால் செதுக்கப் படாதவர்

''சீரார் திருவாரூர் தென்நாகை நள்ளாறு
காரார் மறைக்காடு காறாயில் - பேரான
ஒத்ததிரு வாயமூர் உவந்ததிருக் கோளிலி
சத்த விடங்கத் தலம்''

இத்தலங்களுக்கு முறையே உரிய இறைவனின் திருப்பெயர்களும், நடனங்களும் பின்வருமாறு:

| தலம் | இறைவனின் பெயர் | நடனம் |
|---|---|---|
| 1. திருவாரூர் | வீதிவிடங்கர் | அசபா நடனம் |
| 2. திருநள்ளாறு | நகவிடங்கர் | உன்மத்த நடனம் |
| 3. திருநாகைக் காரோணம் | சுந்தரவிடங்கர் | பாராவாரதரங்க நடனம் |
| 4. திருக்காறாயில் | ஆதிவிடங்கர் | குக்குட நடனம் |
| 5. திருக்கோளிலி | அவனிவிடங்கர் | பிருங்க நடனம் |
| 6. திருவாய்மூர் | நீலவிடங்கர் | கமல நடனம் |
| 7. திருமறைக்காடு | புவனிவிடங்கர் | அம்ஸபாத நடனம் |

# பக்தி மணக்கும் பத்து நாள் விழா

- ஒரு தத்துவம்

— பேராசிரியர் த. அகரமுதல்வன்

சில கோயில்களில் ஒரேநாளில் விழா முடிவதும் உண்டு. சில கோயில்களில் இருபத்தொரு நாட்கள் வரை இவ்விழா நீளுவதும் உண்டு.

**முதல் நாள் திருவிழா:**

கொடியேற்றிய பின் நடைபெறும் திருவிழாவே பெருந்திருவிழா எனப்படும். கொடியேற்றப்படும் நாளே பெருந்திருவிழாவின் முதல் நாளாகும். அன்று மதியத்திற்குள் நல்ல நேரத்தில் பஞ்சமூர்த்திகளும் எழுந்தருளிக் கொடி மரத்தருகே வந்து நிற்பர். திருவிழா சிவபெருமானுக்குரியதாயின் கொடிச்சீலையில் சிவனுக்குரிய ஊர்தியாகிய காளையும், முச்சூலமும் எழுதப்பட்டிருக்கும். பிற தெய்வங்களுக்குரிய திருவிழா நடைபெறின், அந்த அந்த தெய்வத்தின் வாகனம் கொடியில் எழுதப்படும். எல்லா கொடியிலும் பூரணகும்பம், கண்ணாடி ஆகிய மங்கலச்சின்னங்கள் எழுதப்பெற்றிருக்கும்.

நந்தி, கொடிமரம், பலிபீடம், அஸ்திரராசர் ஆகியவைகளுக்கு யாகங்கள் செய்து அவைகளை ஆவாகனம் செய்தபின்; அவைகளுக்கும், அர்ச்சகர்களுக்கும், பஞ்சமூர்த்திகளுக்கும் ரட்சாபந்தனம் (காப்பணிதல்) செய்யப்படும். பின்னர் பேரிதாடனம் என்னும் கிரியை நடைபெறும். இதன்மூலம் விழாவிற்கு வருமாறு தேவர்களுக்கு அழைப்பு விடுக்கப்படுகிறது. பின்னர் கொடிச்சீலையைக் கோயிலுக்கு வலமாகக் கொணர்ந்து கொடிமரத்தில் கட்டி, 'சமஸ்த தேவதா ஆவாகனம்' என்னும் கிரியை நடத்தப்படுகிறது. இதன்மூலம் தேவர்கள் திருவிழா முடியும் வரை கொடிமரத்தில் இருந்தருளுமாறு வேண்டிக் கொள்ளப்படுகின்றனர். பின்னர் கொடியினை வாத்யங்கள் முழங்க வலமாகச் சுற்றிக் கட்டுகின்றனர். அஸ்திர தேவருக்கும், திசைத் தெய்வங்களுக்கும், எழுந்தருளும் திருமேனிகளுக்கும் உரிய பூஜைகள் நிகழுகின்றன.

மும்மலத்தில் கட்டுண்டு கிடக்கும் உயிர், தளைகளை நீக்கிக் கொண்டால் இறைவன் திருவடியை அடையலாம் என்பதைக் கொடியேற்றும் நிகழ்ச்சி காட்டுகிறது. கொடிமரம் பதியையும், கொடிக்கயிறு திருவருட் சக்தியையும், கொடிச்சீலை உயிர்களையும், தருப்பைக்கயிறு பாசத்தையும் குறிக்கும் என்பர். சமம்,

**மூவகை பூசைகள்:**

திருக்கோயில்களில் நாள்தோறும் நடைபெறுகின்ற பூஜைகளை நித்யபூஜை என்பர். நித்யபூஜை கோயிலின் வசதிக்கேற்ப ஆறு காலங்களிலோ, நான்கு காலங்களிலோ, இரண்டு காலங்களிலோ, அல்லது ஒரே காலமாகவோ நடைபெறும். இந்த நித்ய பூஜையைத் தவிர ஒவ்வொரு கோயிலிலும், சிறப்பான பூஜைகளும் அவ்வப்போது நடைபெறும். அவைகளை நைமித்திக பூஜை என்பர். நைமித்திக பூஜைகள் ஒவ்வொரு தெய்வத்திற்கு உரிய 'விசேஷ காலங்களில் நடைபெறும். விநாயகருக்கு விநாயக சதுர்த்தி, முருகனுக்கு கந்தசஷ்டி, அம்பாளுக்கு நவராத்திரி, சிவபெருமானுக்கு சிவராத்திரி - பிரதோஷம் - அன்னாபிஷேகம் ஆகியன. திருமாலுக்கு வைகுண்ட ஏகாதேசி என நைமித்திக பூஜைகள் நிறைய உள்ளன. இவைகளைத் தவிர, பக்தர்கள் வேண்டுதலின் பொருட்டு செய்யும் பூஜைகளை காம்யபூஜை என்பர். நித்யபூஜை, நைமித்திக பூஜை, காம்யபூஜை ஆகிய மூவகை பூஜைகளுமின்றி, ஒவ்வொரு கோயிலிலும் ஆண்டுதோறும் மகோத்சவம் அல்லது பிரம்மோத்சவம் நடைபெறுகின்றது.

**மகோத்சவம் - விளக்கம்:**

மகோத்சவம் என்ற சொல்லுக்குப் படைத்தல் முதலிய மேலான ஐந்தொழில்களைக் குறிக்கும் விழாக்கள் என்று பொருள். (மகா-பெரிய, உத்-மேலான, ஸவ-சிருஷ்டி முதலிய தொழில்கள்). பிரம்மோத்சவம் என்றாலும் இதே பொருளாகும். (பிரம்ம-பெரிய) ஆதலின் திருவிழா என்பது இறைவனின் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களையும் விளக்கிக் காட்டும் நிகழ்ச்சிகளாகும்.

இத்திருவிழா ஒவ்வொரு கோயிலிலும் அக்கோயிலின் தலபுராணத்திற்கேற்ப, அக்கோயில் கடைப்பிடிக்கும் ஆகமத்திற்கேற்ப வெவ்வேறு காலங்களில் நடைபெற்றாலும், நடைமுறையில் பெரிய வேறுபாடுகளின்றி ஒருமாதிரியாகவே நடைபெறும். இத்திருவிழா பெரும்பான்மையான திருக்கோயில்களில் பத்து நாட்கள் நடைபெறுகின்றது.

விசாரம், சந்தோஷம், சாதுசங்கம் ஆகிய நான்கு குணங்களையும் நாற்கால்களாகக் கொண்டது இடபம். அது வெண்மை நிறம் பொருந்திய தரும தேவதை. அதுபோல், உயிர்கள் பரிசுத்தமடையின் அவைகளை இறைவன் தன்னடியில் சேர்த்துக் கொள்வான் என்பது கொடியேற்றம் குறிப்பிடும் உண்மையாகும். உலகை உடலுக்குள் காணும் யோகிகள் கொடிமரத்தை முதுகுத்தண்டாகவும், கொடிச் சீலையை மூலாதாரத்தில் சுருண்டிருந்து, யோக சாதனத்தால் சுழுமுனையை நோக்கி மேலேறும் குண்டலினி என்னும் சக்தியாகவும் கருதுவர்.

கொடியேற்றிய நாள் முதல் பஞ்சமூர்த்திகளும் ஒவ்வொரு நாளும் காலை-மாலை ஆகிய இருவேளைகளிலும் உலா வருவர். பத்து நாட்களிலும் இருவேளைகளிலும் யாக பூஜையும், கொடிமரத்திற்கு நீராட்டு, பூசை, பலி ஆகியவையும் நடைபெறுகின்றன. எழுந்தருளும் திருமேனிகளுக்கு நீராட்டு, ஒப்பனை, தீபாராதனை ஆகியன நடைபெறுகின்றன. கோயிலின் ஈசான திக்கில் இருவேளைகளிலும் யாகம் செய்யப்படுகிறது. பிராகாரத்தில் உலா வரும் தெய்வப் படிமங்கள் யாகசாலையின் முன்னர் வரும்போது 'பூர்ணாகுதி' நடைபெறுகிறது. ஒவ்வொரு நாளும் காலையிலும், மாலையிலும் பஞ்சமூர்த்திகளும் திருவீதிகளில் உலா வருகின்றனர். கோயிலுக்கு வந்து வழிபட இயலாதவர்களுக்கு இறைவன் எளிவந்த பிரானாகி வீதிகளுக்குச் சென்று தாமே காட்சி தருகிறார்.

கொடியேறிய நாளன்று இரவு சிவபெருமான் விருட்ச வாகனத்தில் (மரஊர்தி) உலாவுக்கு எழுந்தருளுவார். மரத்தடியில் சிவபெருமான் வீற்றிருக்கும் இக்காட்சி அவருடைய படைத்தல் தொழிலைக் குறிப்பதாகும். மரத்தின் கிளைகளும் - இலைகளும் தத்துவங்களாகவும், உயிர் வகைகளாகவும் கருதப்படுகின்றன.

## இரண்டாம் திருவிழா:

இரண்டாம் நாள் காலையில் சூரியபிரபை வாகனத்திலும், இரவு சந்திரபிரபை வாகனத்திலும் சிவபெருமான் உலா வருவார். சூரியன் வெப்பத்தால் உலகைக் காக்கிறது. சந்திரன் தண்ணொளியால் உலகுக்கு இன்பஞ் செய்கிறது. இவ்வாகனங்களில் சிவபெருமான் திருமேனி உலா வருவது அவருடைய காத்தல் தொழிலைக் காட்டுகிறது.

## மூன்றாம் திருவிழா:

மூன்றாம் திருவிழாவன்று காலையில் அதிகார நந்தியின் மீதும், இரவு பூத வாகனத்தின் மீதும் சிவபெருமான் எழுந்தருளுகிறார். இவ்வாகனங்கள் சிவபெருமானின் சம்காரத் தொழிலைக் குறிப்பிடுகின்றன.

## நான்காம் திருவிழா:

நான்காம் நாளன்று சிவபெருமான் காலையில் பல்லக்கிலும், இரவில் நாகவாகனத்திலும் எழுந்தருளுகிறார். நாகம் நஞ்சையும், மணியையும் மறைத்து வைத்திருப்பது; தானும் மறைந்துறைவது. ஆதலின், நாகவாகனம் இறைவனின் மறைத்தல் தொழிலைக் காட்டுகிறது.

## ஐந்தாம் திருவிழா:

ஐந்தாம் திருநாளன்று சிவபெருமான் காலையில் இலிங்காகரவட்டமான பிரபையிலும், இரவில் இடபவாகனத்திலும் எழுந்தருளுகிறார். இடபவாகனக் காட்சி சிவபெருமானின் அருட்செயலைக் குறிப்பிடுவதாகும்.

இவ்வாறு முதல் திருவிழா முதலாக ஐந்தாம் திருவிழா வரை முறையே இறைவனின் ஆக்கல், காத்தல், ஒடுக்கல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களும் விளக்கப்படுகின்றன. இம்முறையினை 'விருத்திக்கிரம' முறை என்பர். ஆறாம் திருவிழா முதலாக விழாக்கள் 'லயக்கிரம' முறையில் அமைகின்றன.

## ஆறாம் திருவிழா:

ஆறாம் திருநாளன்று சிவபெருமான் யானை வாகனத்தின் மீது எழுந்தருளுகின்றார். உலகம் இறைவனிடம் ஒடுங்கியபின் மீண்டும் தோன்றுவதை (புனருற்பவம்) இத்திருவிழா குறிப்பிடுகிறது. இதனை 'லயக்கிரம சிருஷ்டிக் கோலம்' என்பர். யானை ஓங்காரநாத சொரூபம். உலகம் நாதத்தில் ஒடுங்கி, பின்னர் இறைவனிடமிருந்து முதலில் நாதம் வெளிப்படுகிறது. பின்னர் அதனின்று பிற தத்துவங்கள் வெளிப்படுகின்றன. ஆதலின், ஒடுங்கியபின் தோன்றும் புனருற்பவத்தை யானை குறிப்பிடுகிறது.

## ஏழாம் திருவிழா:

ஏழாம் திருவிழாவன்று கைலாச வாகனத்தில் சிவபெருமான் எழுந்தருளுவார். கைலாச மலையை இராவணன் தூக்கும் நிலையில் இவ்வாகனம் அமைந்திருக்கும். ஆணவத்தால் கைலாயத்தைத் தூக்க முயன்றான் இராவணன். சிவபெருமான் கால்விரலை ஊன்றினார். மலையடியில் மாட்டிக்கொண்ட

இராவணன் தன் தவறுக்கு வருந்தி, கை நரம்பால் வீணை செய்து மீட்டி, சாமகானம் பாடினான். இறைவன் அவனை மன்னித்து, காப்பாற்றினார். ஆதலின், ஏழாம் திருவிழா காத்தல் தொழிலைக் காட்டுவதாகும். ஏழாம் திருநாளன்று பெரும்பான்மை யான கோயில்களில் சுவாமிக்கும் - அம்பாளுக்கும் திருக்கல்யாணம் நடைபெறும். சிவத்தையும் சக்தி யையும் சேர்த்துக் காண்பதே திருக்கல்யாண நிகழ்ச்சி.

### எட்டாம் திருவிழா:

எட்டாம் திருவிழாவன்று இறைவன் குதிரை வாகனத்தில் எழுந்தருளுவார். இது சம்காரத்தைக் குறிக்கும். எட்டாம் நாளன்று சிவபெருமான் பிட்சா டனக் கோலத்தில் உலா வருவார். தாருகாவனத்து முனிவர்களின் ஆணவத்தை அடக்க சிவபெருமான் பிட்சாடன வடிவம் எடுத்து வந்தார். பிட்சாடனர் வடிவில் இறைவன் வந்ததை மறைத்தல் தொழில் எனலாம்.

### ஒன்பதாம் திருவிழா:

ஒன்பதாம் திருவிழா தேர்த்திருவிழா. இது திருவிழாக்களில் முக்கியமான ஒன்றாகும். தேர் அண்டத்தைக் குறிக்கும். தேரின் ஒவ்வொரு பாகமும் அண்டத்தின் ஒவ்வொரு பாகத்தை ஒக்கும். தேர்த் திருவிழா இறைவனின் அருளற்றொழிலைக் காட்டும் என்பர்.

### பத்தாம் திருவிழா:

பத்தாம் திருவிழாவன்று கடந்த ஒன்பது நாட்களிலும் தனித்தனியே காட்டப்பெற்ற இறை வனின் ஐந்தொழில்களும் ஒரே நாளில் தொகுத்துக் காட்டப்படுகின்றன. பத்தாம் திருவிழாவன்று காலை யில் நடராசர் வீதிஉலா வருவார். நடராசர் சபையை விட்டுப் புறப்படுதல் படைத்தலையும், நீராடல் காத்தலையும், தீபாராதனை முதலியன அழித் தலையும், வெள்ளைச்சாந்துப்பொடி மறைத்தலையும், வீதிவலம், மட்டையடி, தரிசனம் முதலியன அருளலை யும் காட்டுவனவாகும். பத்தாம் நாளன்று மாலை பஞ்சமூர்த்திகளும் நீர்நிலைக்குச் சென்று தீர்த்தம் கொடுத்துத் திரும்பியபின் கொடி இறக்கப்படும்.

இவ்வாறு பத்துநாள் விழாக்களும் சிவ பெருமானுடைய ஐந்தொழில்களையும் விளக்கு வனவாக அமைந்துள்ளன. கொடியிறங்கிய பின்னரும் கோயிலின் வசதிக்கேற்ப சண்டேசுவர உற்சவம், தெப்ப உற்சவம், ஆச்சார்ய உற்சவம் முதலியன நிகழும். வாகனங்களைப் பயன்படுத்துவதிலும், தேர்-திருக்கல்யாணம் முதலியன நிகழ்த்துதலிலும் கோயி லுக்குக் கோயில் சில வேறுபாடுகள் உள்ளன. பெரும் பான்மையான இடங்களில் நடைமுறையில் உள்ளபடி இக்கட்டுரையில் காட்டப்பெற்றது.

★★★

## வாசகர் எண்ணங்கள்

''திருக்கோயில்'' இதழ் புதுப்பொலிவுடன் ஒளியச்சு முறையில் வெளிவருவது கண்டு வான்மழை வரக் கண்ட வாடிய பயிர் போல் மனமகிழ்ச்சி கொண்டேன்.

- பாலம்மாள், சென்னை - 17.

தமிழ் அருச்சனை மேம்பாட்டிற்காகத் தமிழக அரசு ஆற்றிவரும் ஆக்கப்பூர்வமான பணிகள் பாராட்டத்தக்கவை எல்லாத் திருக்கோயில்களிலும் தமிழ் அருச்சனை சிறப்புற நடைபெற அரிய பணிகள் ஆற்றிவரும் அறநிலையத் துறையை மனமார வாழ்த்துகின்றேன்.

- அ. தமிழ்ப்பித்தன், ஈரோடு - 6.

அருளாளர் மாதவ சிவஞான மாமுனிவர் பற்றிய ஆணையாளர் அவர்களின் தலைமையுரை, மிகவும் தெளிவாகவும் விளக்கமாகவும் இருந்தது அருளாளர் விழாக்களைச் சிறப்புறக் கொண்டாடிட அறநிலையத்துறை ஆற்றிவரும் பணிகள் பொன்னெழுத்துக்களில் பொறிக்கத் தக்கவை.

- அருட்செல்வி, சென்னை - 41.

திருக்கோயில் இதழில் வெளிவரும் கட்டுரைகள் யாவும் படிக்க, சிந்திக்க, பாதுகாத்துக் காத்திடத்தக்கவையாக உள்ளன.

- குமார், வேலூர்.

# நன்னெறிக்கு அருணகிரி

- திருப்புகழ்மாமணி மு. அருணகிரி

நினைத்த மாத்திரை முத்தியளிக்கும் திருவண்ணாமலையில், இன்றைக்கு ஏறத்தாழ 500 ஆண்டுகளுக்கு முன்னர் தோன்றிய அருணகிரிநாதர், எவ்வாறு ஞானசம்பந்தர், உமாதேவி கொடுத்த ஞானப்பால் அருந்தியதும், அம்மையும் அப்பனையும் நேரில் கண்ட பிறகே, திருக்கடைக்காப்பு (தேவாரம்) பாடத்தொடங்கினாரோ, அதுபோன்றே முதன்முதலாக திருவண்ணாமலை கோபுரத்தில் முருகப்பெரு மானை கண்குளிர தரிசித்து, திருவடி தீட்சைப் பெற்ற பிறகே, அவன் அருளால் திருப்புகழ் போன்ற கவிகளைப் பாடிய அடியாராவார்.

ஏனைய அருளாளர்கள் தாங்கள் இயற்றிய பாடல்களுக்கு, தாங்களோ, அல்லது ஆன்மீகப் பெரியோர்களோ தலைப்பு வைத்துக் கொண்ட போதிலும், அருணகிரியார் தாம் பாடிய பாடல்களுக்கு, வயலூர்ப்பிள்ளையாரே, **''செய்ப்பதியும் வைத்து உயர்திருப்புகழ் விருப்பமொடுசெப்பு''** எனத் தலைப்பு தந்தருளியதால், இவரது பாடல்களுக்கு ஏற்றமும் தோற்றமும் உண்டாயிற்று. இவரால் பாடப்பெற்ற பாடல்களை ஆராயும்போது, தமக்கென ஒரு தனிப்பாணியைஅமைத்துக்கொண்டதாக அறிய முடிகிறது. **''தன் நாயகன் பொருட்டன்றி, பிறரை வணங்காப்பத்தினிப் பெண்டிர்''** போல, முருகன் பொருட்டன்றி ஏனைய மூர்த்திகளை நேர்முகமாக வழிபடா கொள்கை உடையவர் என்பது, இவரது பாடல்களிலிருந்தே அறியமுடிகிறது.

தாம் பாடிய திருப்புகழ் பாடல்களில், முற்பகுதி 4 சீர்களில் விண்ணப்பமாகவும், பின் 4 சீர்களில் விளியாகவும் பாடியுள்ளார். முற்பகுதி 4 சீர்களிலும், வறுமையைப் பற்றியும், நோய்களின் துன்பங்களைப் பற்றியும், விலைமாதர்களால் ஏற்படும் சிற்றின்பக் கேடுகளையும் பற்றி கூறி, மக்கள் அவதியுறும் நிலையைக் கண்டு, அவைகளைத் தாமே ஏற்று இறைவனிடம் பாடியதாகத்தான் கருதுதல் வேண்டும்.

அவ்வாறன்றி, தாமே, தன் வாழ்நாளில் மேலே கூறப்பட்ட குறைபாடுகளை அனுபவித்துத்தான் பாடியிருத்தல் வேண்டும் எனக் கருதுவோர்க்கு அவரால் விவரிக்கப்பட்ட நோய்களைப் பற்றிபாடிய பாடல் ஒன்றை கவனிப்போம்:-

''இருமலு ரோக முயலகன் வாதம்<br>
எரிகுண நாசி .... விடமே நீர்<br>
இழிவு விடாத தலைவலி சோகை<br>
எழுகளமாலை .... இவையோடே<br>
பெருவயிறீளை எரிகுலை சூலை<br>
பெருவலிவேறும் ... உளநோய்கள்<br>
பிறவிகள்தோறும் எனை நலியாதபடி<br>
உனதாள்கள்...... அருள்வாயே.

*(தணிமலை மேவு- பெருமாளே)*

என திருத்தணித்தலப் பாடலில் பாடியுள்ளதை கவனித்தால், இப்பாடலில் பட்டியலிடப்பட்டுள்ள பிணிகள் தனக்கெனப் பாடி இருந்தால், இத்தனை வியாதி களையும் ஒரு மனிதன் தன் வாழ்நாளில் அனுபவித்திருக்க இயலுமா? சற்றே சிந்தித்தல் வேண்டும். உலக மக்கள் பலவித நோய்களால் வேதனைப் படுவதைப் பார்த்துத்தான் பாடியிருத்தல் வேண்டும். உதாரணத்திற்கு, நோய்களைப் பற்றி நன்கு கற்றுத் தேர்ந்த மருத்துவர்கள் எல்லோரும், வியாதியஸ்தர்களை சோதித்து மருத்துவம் செய்தபோதிலும், அது போன்ற வியாதிகளை, இவர்கள் முன்னரே அனுபவித்துவிட்டுத்தான், நோய்க்கு ஏற்ற மருந்தைத் தருகிறார்கள் எனக் கருதுவது எவ்வாறு பொருந்தாதோ, அது போன்றுதான் மக்களிடத்தில் தோன்றும் பலவித நோய்களையும், தமக்கு வந்ததுபோல் பாவித்து, பரிகாரமாக இறைவனிடத்தில் முறையிடும் வகையினை அறிவித்துள்ளார்.

இனி, இவர் எத்தகைய பண்பாளர் என்பதையும், இவரது பாடலிலிருந்தே அறிய முடிகிறது. **''அனிச்சங்கார்''** எனத்துவங்கும் பாடலில் **''விடக்கு அன்பாய் நுகர் பாழனை''** என வருகின்றது. விடக்கு - என்றால் மாமிசம். பொதுவாக இப்பாடலின் பொருளைக்கவனித்தால், மாமிசம் விரும்பி உண்ணும் பாழனை எனக் கருத வேண்டும். அதனால் இவர் நேர்மையான ஒரு பொருளைச்சொல்லாமல் அசைவர் எனக் கூறுவதாகக் கருதினால், இவரால் பாடப்பெற்ற கந்தர் அந்தாதி செய்யுளில் 31- வது பாடலில், **''செந்தீ தாவு அசவு அநியாயம் செய் வேதியரே''**, என்று

நேர்மாறாக, இந்திர போகத்தை விரும்பி, ஜீவ காருண்யம் சிறிதுமின்றி, தாங்கள் வளர்க்கும் யாகத்தில், ஆட்டை உயிரோடு வதைக்கின்ற வேதியர்களே என்று கண்டித்துள்ளதைக் கவனித்தால், இவர் சைவ ராகத்தான் இருந்திருக்க வேண்டும்.

சிலர், இவரால் பாடப்பெற்ற பாடல்களில் சிற்றின்பவர்ணனைகள் (வேசியர்களிடம்) பலவித கோணங்களில் பாடியுள்ளதை கொண்டு, இவர் அவுவாறெல்லாம் அனுபவித்துத்தான் பாடியிருத்தல் வேண்டும் எனக் கருதுவர். இது யாவர்க்கும் இயல்பு. அதே ஆசிரியர், கற்புடைய மனையாளைப் பற்றியும், மக்களையும் பற்றி ஒப்புயவர்வற்ற நிலையில் வைத்து பாடிய பாடல்களையும் சிறிது பார்க்க வேண்டும். மேலும், வேசியர்களின் வர்ணனை சிறிதும் கூறாது பாடிய கந்தர் அந்தாதியில் ***(பாடல்: 4)***, என் உறவினர்களும், மக்களும் சூழ்ந்து அழும்படி என்னை எமன் தன் உலகத்தில் அழைத்து செல்லாவண்ணம், நரகத்தினின்று காத்திடல் வேண்டும் என்று, கற்புடைய மனைவியையும், மக்களை குறித்து பாடியிருப்பது எவ்வளவு உயர்ந்த பண்பின் அடிப் படையில், என்று சிறிது சிந்தித்தல் வேண்டும். உதாரணத்திற்கு, மூவேந்தர்களும் சிற்றரசர்களும், ஞானிகளும் இறைவனுக்கு ஆலயம் அமைக்க முற்படும்போது, முதலில் உயர்ந்த கோபுரங் களையும், அழகிய மண்டபங்களையும், சிறந்த சிற்பிகளைக் கொண்டு, பல உருவ வேலைப்பாடுகளைக் கொண்டு அமைக்கக் கருதி, கலைஞனையும், சிற்பக் கலையையும் போற்றி வளர்த்துள்ளனர். அவர் களால் அமைக்கப்பட்ட உருவ வேலைப்பாடுகள் கவனித்தால், அதில் காமவிளையாடல்களின் காட்சிகளைக் கூட கற்றுளியால் செதுக்கி, கலைத்திறனை புலப் படுத்தியுள்ளனர். காஞ்சியில் உள்ள ஏகாம்பர நாதர் ஆலய கோபுரத்திற்கு முன்பு கற்றூண்களால் கட்டப் பட்டுள்ள மண்டபங்களில், ஒரு தூணில், நிர்வாண கோலத்தில் ஒரு பெண் அணங்கை சிற்றுளியால் செதுக்கியுள்ளதை கவனிக்கலாம். மதுரை ஆலய கோபுரத்தில் பல உருவங்களை வடித்திருப்பது காணலாம். ஒரு பக்கம் குரங்காட்டியின் சிற்பம், மற்றொரு பக்கத்தில் குறவன் குறத்தி உருவங்களையும், காமனும் ரதியும் எதிரெதிரே நிற்கும் பாணியில் இன்னொரு பக்கமும், முற்றும் துறந்த முனிவர்கள் பெண் அணங்கைக் கண்டு காமுற்று, தவம் குலைந்த நிலையில் இருப்பதை ஒரு பக்கத்திலும், கற்பக விருட்சம், காமதேனும் ஒரு பக்கமும், ஏனைய பரிவாரத் தெய்வங்களின் திருவிளையாடல்களை ஓர் பக்கமும், பொறித்திருப்பதைக் காணலாம். திருவாரூர் கோயிலிலும் இது போன்ற சிற்பங்களை இன்றும் காணலாம். மேலே கூறியவைகளை, அக்கால மக்கள் ஆலய கோபுரங்களிலும், மண்டபங்களிலும் பொறித்துள்ளதை மறுத்திருந்தால் அவைகளை அழித்திருப்பர். மேலும் இது போன்று ஆலய கோபுரங்களில் செதுக்கா வண்ணம் தடுத்திருப்பர்.

அதுபோன்ற சிற்பக்கலைகளை எவ்வாறு இன்று வரை மக்கள் புறக்கணிக்காது போற்றி வருகின்றனரோ, அவ்வாறே அருணகிரியால் பாடப்பட்ட பலவித வர்ணனைகளையும் நாளது வரை, ஏன் அக் காலத்திலும், பக்தர்கள் புறக்கணிக்காது பாடியும், தொழுவதும், வருவதைக் காணலாம். சிற்றின்ப வர்ணனைகளைப்பற்றியே கூர்ந்து கவனிக்கும் மக்கள், அவரால் உயர்ந்த நிலையில் கற்புடைய மாதர்களைப் பற்றிய பாடல்களையும் கவனித்தல் அவசியம். அன்னாரால் பாடப்பெற்ற அத்தனை குறைபாடுகளையும் மக்களிடம் கண்டதை, தாமே ஏற்று இறைவனிடம் பாடப்பட்டதாகவே கருதுதல் சிறப்பு.

பெரியோர்கள், ''**நீர் தப்பு செய்தீர்**'' எனச் சொல்லமாட்டர்கள். பதிலாக, அடியேன் செய்த தப்புக்கு இந்தப் பரிகாரம் வேண்டும் என்று சொல்லி மனச் சாந்தியடைவர். ஒருவர் செய்த குற்றத்தை சுட்டிக்காட்டினால், அவர்களுக்குக் கோபம்தான் வரும். கோபம் போன்ற வெகுளியை எல்லாம் அறுத்தெறிய வேண்டும் என நினைக்கும் பெரியோர்கள், அப்படி சொல்லிக்கூட கோபத்தை வருவிக்க மாட்டார்கள். இதையே ''**நச்சியானந்தம்**'' எனக் கூறுவர். இதைப் பற்றி, ''**சினத்தை நிந்தனை செயுமுநிவரர்தொழ மகிழ்வானே**'' எனஒரு பாடலில் அருணகிரியார் பாடியுள்ளார்.

இதன் அடிப்படையிலேதான், நாயன்மார்களும், ஆழ்வார்களும், ஞானிகளும் தங்களது பாடலில் மக்களின் பொருட்டு பாடியுள்ளார்கள். மாணிக்க வாசகர் பாடியுள்ள ''**ஆசைப்பத்து, அதிசயப்பத்து, அச்சோதிப்பதிகம்**'' போன்ற பாடல்களில், பெண்களின் வர்ணனை பற்றி வந்துள்ளதை கவனிக்கலாம். அதனால் மணிவாசகர், பெண்கள் மயக்கத்தில் உழன்றார் எனக் கொள்ளுதல், எந்த விதத்திலும் பொருந்தாதோ, அவ்வாறு அருணகிரி பாடலையும், கொள்ள ல் வேண்டும். திருநாவுக்கரசர், திருப்புகலூர் பதிகத்தில் ''**இலவினார் மாதர் பாலே இசைந்து நானிருந்து பின்னும்** '' என்பதாகப் பாடியுள்ளதைக் கொண்டு, அப்பரும் பெண் மயக்கத்தில் அவதி யுற்றிருப்பார் என்பதைச் சைவ சமுதாயம் ஏற்காது.

எம்பெருமான் கருணையினால் முதிர்ச்சி பெற்று, வேறு பிரபஞ்சமாயையிலும் மனம் செல்லாது, சைவமக்களால் சைவத் திருமுறைகளில் சேர்க்கப்பெற்ற சிறந்த அடியார் ஒருவர் இயற்றிய ஒரு செய்யுளைப் பார்ப்போம் :-

''வினையாது ஒழுதிகண்டாய், நெஞ்சே
இங்கோர் தஞ்சமென்று
மனையாளையும் மக்கள் தம்மையும்
தேறி - ஓர் ஆறுபுக்கு
நனையா சடைமுடிநம்பன், நம்தாதை,
நொந்தா செந்தி
அனையான், அமரர்பிரான்,
அண்டவாணன் அடித்தலமே''

இப்பாடலின் பொருளைக் கவனித்தால், பாடிய வருக்கு மனைவியும், மக்களும் இருந்ததாகவே கொள்ளவேண்டும். ஒருவேளை மக்கள் இருந் திருக்க வாய்ப்பிருப்பினும், மனையாள் இருந் திருக்க வாய்ப்பு இருக்காது. காரணம் இப்பாடலை இயற்றியவர், பெண்பால் இனத்தைச் சேர்ந்த **''காரைக்கால் அம்மையார்''** ஆவார்.

ஆகவே மக்களின் குறைபாடுகளை தாமே ஏற்று முருகனிடம் விண்ணபித்ததோடு நிற்காது அருணகிரி, மக்களுக்கும், இறைவனுக்கும் ஓர் இணைப்புப்பாலமாக இருந்து, தாம் பெற்ற பேரின்பத்தையும் கூறி, யாவரும் நற்கதி அடையும் பொருட்டே, அளவற்ற கவிகளை, அவரவர் குறைபாடுகளுக்கு ஏற்ற விதத் தில் பொருந்தும்படி பாடியுள்ளார். இதுதான் **சமரச நோக்கு**. எல்லோரும் ஏற்றுக்கொள்ளும் விதத்தில் ஒன்றை மக்களுக்கு உரைப்பதுதான் உயர்ந்த உரை யாகும். சான்றோர், அறிவுள்ளோர், புலமையுள்ளோர் கூறும் மொழிகளில் இத்தகைய பொது வாசகத்தை பார்க்கக் காணலாம்.

அருணகிரியார் இயற்றிய அனைத்து பாடல் களிலும், கூறியிருக்கும் குற்றங்கள் அனைத்தையும், சிற்றின்ப வர்ணனைகளையும் சேர்த்து, ஒரு மனிதன் தன் வாழ்நாளில் அனுபவித்திருக்க இயலாது. இன்று கிடைத்துள்ள 1340 பாடல்களிலே இவ்வளவு குறை பாடுகள் கிடைத்திருக்குமானால், அவர் பாடியதாக எண்ணப்படும் 16000 திருப்புகழ் பாடல்களும் கிடைத் திருந்தால் எவ்வளவு ஒரு பட்டியலாக இருக்கும் என்பதனை சற்றே சிந்திக்க வேண்டும்.

அன்னாரால் பாடப்பெற்ற **'' கந்தரனுபூதி''** யைப்பற்றி சிறிது ஆராய்வோம். இக்கவியை மானுட தேகத்தில் இருக்கும்போதே பாடியிருத்தல் வேண்டும். ஆராய்ச்சியின் மூலம், மானுட தேகத்திலிருக்கும் போதே பாடிய கந்தர் அனுபூதியில் **''பேசா அனுபூதி பிறந்ததுவே''** எனும் நிலை அடைந்தவுடன், இயற்றினது **''திருவகுப்பு''** என்றும், திருப்புகழ் பாடி, முருகன் திருவருள் பெரிதும் ஊறிவூறி பேரானந்தம் முதிர்ந்து, ததும்பியநிலையின் பாடியது **''கந்தர் அலங்காரம்''** எனவும் கொள்ளுதற்கு இடமளிக்கிறது. கந்தர் அனுபூதி என்பது மந்திரமாலை போன்றது. தான்கிளியாக மாறியதும், முருகனது திருக்கரத்தில் இருந்து பாடிய தாக, அன்னாரது பாடல்களில் எங்கும் குறிப்புகள் காணவில்லை. கிளியாயிருந்து கந்தரனுபூதி பாடி யிருக்கவேணும் எனக் கருதுவோர்க்கு, அப்பாடல் களில் சிற்றின்ப வர்ணனைகளைக் குறித்து, முருக னது திருக்கரத்தில் இருந்து பாடி இருக்க வேண்டி அவசியம் இருக்காது. பக்திமான்கள் உள்ளத்தில் அழுத்தமாகப் பதியவே முருகனது திருக்கரத்திலே யிருந்து, அவன், சொன்னதைச் சொல்லும் கிளியே அருணகிரியாவார் எனச்சொல்லி, மனதை ஒரு நிலைப்படுத்தவே, ஆராய்ச்சியாளர்கள் கற்பனை செய்து, அல்லது மனதில் தோன்றியதைக் கூறி யும் இருக்கலாம் அல்லவா? மானுடத் தேகத்தி லிருக்கும்போது அருணகிரியார் முருகனிடம், தான் மானிடப்பிறவியை மறுபடியும் எய்தாது, அவனது திருக்கரத்தில் கிளியாக இருந்தே பாடும் பணியை முறையிட்டுக் கொண்டதைப்பற்றி, தாம் பாடிய பல பாடல்களிலும் **''சுகசொரூபம்''** (சுகம்-கிளி) அருளும் படி முறையிட்டுள்ளதைக் காணலாம். இதனைபூர்த்தி செய்யவே, எவ்வாறு அப்பரடிகளுக்கு தூங்கானை மாடத்தில் சிவகணங்களால் சூலமும், இடபக் குறியும் பொறித்தருளினாரோ, அதேபோன்று, அருணகிரியாருக்கும், அவரது வேண்டுதலை பூர்த்தி செய்யவே, திருத்துருத்தி (குற்றாலம்) எனும் தலத்தில், முத்தியதாம் அனுபூதி என் அருட் திருப்புகழ் ஓதுவாயாக என அருளிச் செய்து, வேல்மயில் பொறித் தருளியதை, ஒரு பாடலில்,

''அடைக்கலப் பொருளாம் நாயெனை
அழைத்து
முத்தியதாம் அனுபூதி என் அருட்திருப்
புகழ் ஓதுக,
வேல்மயில் - அருள்வோனே''

எனப் பாடியதிலிருந்து அறிய முடிகிறது.

கிளியாயிருந்து திருவகுப்பு பாட ஆசைப்பட்டார் என்பதற்குத் திருப்புகழிலேயே,

''நெஞ்சுருகி நெக்குநெக்கு நின்று தொழும்
நிர்க்குணத்தர் நிந்தனையில் பத்தர்
வெட்சி மலர் தூவும்,
நின்பதயுகப்ர சித்தி என்பன வகுத்துரைக்க -
நின் பணிதமிழ்த்ரயத்தை - அருள்வாயே''

எனபாடியதிலிருந்து, கிளியாக இருந்து சீர்பாத வகுப்பு பாடவே ஆசைப்பட்டார் என அறியமுடிகிறது. திரு வகுப்பில் மட்டும்தான், உலக பாசங்களைச் சிறிதும் கலவாது, பேரின்ப நிலைக்கு உதவுதான வேதத்தின் சாரத்தை பற்றியே பாடியுள்ளதையும் கவனிக்கலாம். மேலும் திருவகுப்பு பாடும்போது, தனது முற்பிறப்பை பற்றிய சிந்தை இல்லாது, வேளைக்காரன் வகுப்பில், ஒரு சீரில்

''உரைபெற வகுத்து அருணை
நகரினொருபத்தனிடும்
ஒளி வளர் திருப்புகழ் மதாணிக் -
கிருபாகரனும்'' -

என்று படர்க்கை வினையில் பாடியுள்ளதை கவனிப்பது அவசியம்.

அருணகிரியார் வாழ்ந்த காலத்தில், அரசர்களும், போர்வீரர்களும், குடிமக்களும், பகைவர்களது போரின்றி சுக வாழ்விலே, மதுபானம் அருந்துவதிலும், சிற்றின்பக் கேளிக்கைகளிலும் வாழ்நாளை கழித்து, பக்தியில் மனம் செலுத்தாது, வாழ்நாளை வீணாக கழிப்பதைக் கண்டு, மக்களிடம் தோன்றும் துன்பங்களைக் களையும் பொருட்டே, பாடல்களின் முற்பகுதி 4 சீர்களிலும் இறைவனிடம் முறையிட்டுக் கொண்டும் பிற்பகுதி 4 சீர்களிலும், முருகனுடைய பெருமையை விளியாக அமைத்து பாடிய பெருமை இவரையே சாரும்.

பொதுவாக, மருத்துவர்கள் தங்கள் பகுதியில் வாழும் மக்களுடைய நோய்களைத் தனித்தனியே பரிசோதித்து, மருந்துகள், கொடுத்துவந்தபோதிலும், அப்பகுதியிலேயே வாழும் மக்களுக்கு வயிற்றுப் போக்கோ, விஷக்காய்ச்சலோ வந்துவிட்டால், ஒவ்வொருவரையும் தனித்தனியே சோதித்து மருந்து கொடுப்பது முடியாதாகையால் விசாரித்தவுடனே, பெரிய சீசாவில் மருந்தை மொத்தமாக கலந்து வைத்து, அவரவர்களுக்குக் கொடுத்து அனுப்புவது தான் முறை. அதேமுறையில், அருணகிரியாரும், அவதியுறும் மக்களின் பலவிதமான துன்பங்களைக் கண்டு, அவரவர்கள் குறைகளுக்கு ஏற்றவண்ணம் முருகனிடம் துதி செய்யும் வகையில் பாடியுள்ளார்.

ஆனால் இக்காலத்தில் மட்டும் அத்தகைய சிற்றின்ப நோய்கள் குறைந்துள்ளதா என்ன? கலையின் பெயரால், சிற்றின்பக்கலை தலைதூக்கி நிற்பதைத் திரைப்படங்கள் மூலமாகவும், வானொலி மூலமாகவும், போதாததற்குத் தொலைக்காட்சி மூலமாகவும், சுவரொட்டிகள் மூலமாகவும், மக்களின் மனதை திசைதிருப்பும் நோக்கத்துடன் செயல்பட்டு வருவது வருந்தத்தக்கதொன்றாகும். 500 ஆண்டுகளுக்கு முன்னரே இவர் பாடிய பாடல்களில் உள்ள ஆழ்ந்த கருத்துக்களை நோக்கின், அக்காலத்துக்கு மட்டுமின்றி, எதிர்காலத்துக்கும் ஏற்ற வகையில் பாடியுள்ள அருணிகிரியாரை எவ்வாறு புகழ்வதென்று தெரியவில்லை. அதனால் இவரை, **''நன்னெறிக்கு அருணகிரி''** எனப் புகழ்வதில் என்ன தவறு இருக்கப் போகிறது.

இதுகாறும் அறிவிக்கப்பட்ட கருத்துகளில், குறைகள் இருக்கலாம். அதில் ஒன்றும் ஆச்சரியம் இல்லை. என்னுடைய கருத்துகளினால் உண்டான பலனை போற்றுவதானால் அதுவே எனக்கு மனச் சாந்தி அளிக்கும்.

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்,
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய் கதியாய் விதியாய்,
குருவாய் வருவாய் அருள்வாய் - குகனே''

★★★

## நோய் தீரலாம்

நீரார் சடையானை நித்தல் ஏத்துவார்
தீரா நோயெல்லாம் தீர்தல் திண்ணமே.

- திருஞானசம்பந்தர்.





மயிலை அருள்மிகு கபாலீசுவரர் ஆலயத்தில் கோடைக்கால சைவ வகுப்புகள் மிகச்சிறப்பாக நடைபெற்றன. வகுப்புகளின் நிறைவு விழாவில் ஆணையாளர் திருமிகு. ச. மெய்கண்டதேவன், இ.ஆ.ப., அவர்கள் கலந்து கொண்டு சான்றிதழ் வழங்கினார்கள். தொண்டை மண்டல ஆதீனகர்த்தர் தவத்திரு ஞானப்பிரகாச தேசிக பரமாச்சாரிய சுவாமிகள், திருப்போரூர் ஆதீனகர்த்தர் தவத்திரு சிதம்பரர் சுவாமிகள் ஆகியோர் ஆசியுரை வழங்கினார்கள்.

அறங்காவலர் குழுத் தலைவர் டாக்டர் சீர்காழி ஜி. சிவசிதம்பரம் அவர்களும், ஆலய நிர்வாக அதிகாரி திரு பன்னீர் செல்வம் அவர்களும் விழா ஏற்பாடுகளைச் சிறப்புறச் செய்திருந்தார்கள்.





குன்றத்தூரில் தெய்வச் சேக்கிழார் விழா 25.5.98 அன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது. மாண்புமிகு தமிழ் வளர்ச்சி, தமிழ்ப் பண்பாடு மற்றும் அறநிலையத் துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள் கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றினார்கள். அறநிலையத்துறை ஆணையாளர் திருமிகு. ச.மெய்கண்டதேவன், இ.ஆ.ப., அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினார்கள். மயிலம் ஆதீனகர்த்தர் தவத்திரு சிவஞான பாலைய சுவாமிகள், திருப்போரூர் ஆதீனகர்த்தர் தவத்திரு சிதம்பர சுவாமிகள் ஆகியோர் ஆசியுரை வழங்கினார்கள். திருப்பெரும்புதூர் சட்டமன்ற உறுப்பினர் திரு. கோதண்டம் மற்றும் பேராசிரியர் முனைவர் தெ. ஞானசுந்தரம், முனைவர் சாரதா நம்பியாரூரன், முனைவர் த. அமிர்தலிங்கம் ஆகியோர் உரையாற்றினார்கள்.

வெளியிடுபவர் : ஆணையர், தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, சென்னை - 600 034.
ஆசிரியர் : கவிஞர் டாக்டர் த. அமிர்தலிங்கம், எம்.ஏ., பிஎச்.டி.,
அச்சிட்டோர் : பாவை பிரிண்டர்ஸ் (பி) லிட்., 142, ஜானி ஜான் கான் தெரு, சென்னை - 600 014.